உ
சிவமயம்
ஸ்ரீ மஹாதேவ ஜயம்

# ஸ்ரீராமாயண தாத்பர்ய ஸங்க்ரஹ ஸ்தோத்ரம்
# ஸ்ரீபாரத தாத்பர்ய ஸங்க்ரஹ ஸ்தோத்ரம்





பிரசுரம் :

ஆங்கீரஸ S. வேங்கடேச சர்மா
5, டெலிபோஸ்ட் காலனி குறுக்குத் தெரு,
மேலமாம்பலம் : : சென்னை-600 033.

 3 - 10 - 1988 [விலை ரூ. 3-00

உ
சிவமயம்
ஸ்ரீ மஹாதேவ ஜயம்

# ஸ்ரீராமாயண தாத்பர்ய ஸங்க்ரஹ ஸ்தோத்ரம் ஸ்ரீபாரத தாத்பர்ய ஸங்க்ரஹ ஸ்தோத்ரம்

(ஸர்வதந்த்ர ஸ்வதந்த்ரர், மஹான்
ஸ்ரீமத் அப்பய்ய தீக்ஷிதர் அருளியவை)

தமிழ் உரையும் விளக்கமும் :
பாஷ்ய பாவக்ஞ, பிரம்மஸ்ரீ
வரஹூர் கல்யாணஸுந்தர சாஸ்திரிகள்



விபவ ஆண்டு ஸ்ரீமத் அப்பய்ய தீக்ஷிதர்
ஜயந்தி வெளியீடு

பிரசுரம் :
ஆங்கீரஸ S. வேங்கடேச சர்மா
5, டெலிபோஸ்ட் காலனி குறுக்குத் தெரு,
மேலமாம்பலம் : : சென்னை-600 033.

 3 - 10 - 1988 [விலை ரூ. 3-00

11-5

உ
சிவமயம்
ஸ்ரீ மஹாதேவ ஜயம்

# ஸ்ரீராமாயண தாத்பர்ய ஸங்க்ரஹ ஸ்தோத்ரம்
# ஸ்ரீபாரத தாத்பர்ய ஸங்க்ரஹ ஸ்தோத்ரம்

(ஸர்வதந்த்ர ஸ்வதந்த்ரர், மஹான்
ஸ்ரீமத் அப்பய்ய தீக்ஷிதர் அருளியவை)

தமிழ் உரையும் விளக்கமும் :
பாஷ்ய பாவக்ஞ, பிரம்மஸ்ரீ
வரஹூர் கல்யாணஸுந்தர சாஸ்திரிகள்



விபவ ஆண்டு ஸ்ரீமத் அப்பய்ய தீக்ஷிதர்
ஜயந்தி வெளியீடு

பிரசுரம் :
ஆங்கீரஸ S. வேங்கடேச சர்மா
5, டெலிபோஸ்ட் காலனி குறுக்குத் தெரு,
மேலமாம்பலம் : : சென்னை-600 033.

 3 - 10 - 1988 [விலை ரூ. 3-00

உ

சிவமயம்

ஸ்ரீமஹாதேவ ஜயம்

ஸ்ரீராமாயண தார்த்பர்ய ஸங்க்ரஹ ஸ்தோத்ரம்
ஸ்ரீபாரத தாத்பர்ய ஸங்க்ரஹ ஸ்தோத்ரம்
முதல் பதிப்பு 1000 பிரதிகள்

விபவ ஆண்டு (1988)

---

## ஸமர்ப்பணம்

பாரத தேசமெங்கிலும் உள்ள ஸ்ரீமத் அப்பய்ய தீக்ஷிதேந்திரரின் வம்சத்தைச் சேர்ந்தவர்களான சிவ பக்த மணிகளுக்கு இந்த நூல் ஸமர்ப்பணம் செய்யப் படுகிறது,

---

பதிப்பாசிரியர் :

சிவபக்திப் பிரசாரமணி

**சிவபுராண ஞானபூஜகர், சாஸ்த்ரப்ரசார பூஷணம், சிவபுராணச் சக்ரவர்த்தி, சிவபுராணக்காவலர்**

**ஆங்கீரஸ சர்மா**

(சங்கரனடிமை)




உ
சிவமயம்
ஸ்ரீ மஹாதேவ ஜயம்

# ஏழையாளும் ஈசன் செயல்

## பதிப்புரை

1. ஸர்வதந்த்ர ஸ்வதந்த்ரர், ஸ்ரீ கண்டமதப்பிரதிஷ்டாபனுசார்யர், சதுரதிகசதப்ரபந்தகர்த்தா, (104 நூல்களை இயற்றியவர்), அத்வைத வித்யாசார்யர், இரண்டாவது சங்கரர் என்றெல்லாம் போற்றி வணங்கப்படும் பெருமைவாய்ந்தவர் ஸ்ரீமத் அப்பய்ய தீக்ஷிதர் என்ற மஹான் ஆவர். இவர் இயற்றியருளிய சிவபரத்துவத்தைத் போதிக்கும் நூல்களில் ஸ்ரீ ராமாயண தாத்பர்ய ஸங்க்ரஹம், ஸ்ரீ பாரத தாத்பர்ய ஸங்க்ரஹம் என்ற இருநூல்களும் அடங்கும். இவற்றிற்கு விரிவான உரையையும் ஸ்ரீமத் தீக்ஷிதேந்திரர் அவர்களே இயற்றியுள்ளார்கள்.

2. அடியவன் 1961ம் ஆண்டில் ஸ்ரீசங்கர பக்தஜன ஸபா என்ற அமைப்பினை நிறுவி அதன் ஆதரவில் ஸ்ரீ ஆதி சங்கர பகவத்பாதர்களின் நுல்களையும், மற்றும் சிவோத்கர்ஷ புராணங்களையும் பிரவசனம் செய்வித்தும் செய்தும், ஆண்டு தோறும் ஸ்ரீ சங்கர ஜயந்தி விழாவைப் பத்து பதினைந்து தினங்கட்கும் குறையாது நடத்தியும் வந்த சமயத்தில் 1965ம் ஆண்டில், ஸ்ரீமத் அப்பய்ய தீக்ஷிதரைப்பற்றி அறியநேர்ந்தது. அந்த ஆண்டிலிருந்து ஸ்ரீமத் அப்பய்ய தீக்ஷிதரின் ஜயந்தியை அச்சபையில் ஆதவிரலேயே நடத்தலானேன். இந்த ஜயந்தியும் ஐந்து நாட்களுக்குக் குறைவு படாமல் 10 நாட்கள் வரையிலுங் கூட நடைபெற்றதுண்டு.

3. 1965ம் ஆண்டு ஸ்ரீமத் தீக்ஷிதர் ஜயந்தி ஆரம்பித்த பொழுது ஒரே ஒரு நாள்மட்டுமே கொண்டாட நேர்ந்தது.

அன்று தீக்ஷிதேந்திரர் திவ்ய சரித்தை உபன்யாஸம் செய்தவர்கள் பாஷ்யபாவக்ஞ பிரம்மஸ்ரீ வரஹூர் கல்யாணஸுந்தர சாஸ்திரிகள் அவர். தொடர்ந்து ஒவ்வொரு வருஷமும் இவர்களுடைய பிரவசனம் நடைபெற்றது. பல சமயங்களில் இவர்கள் பிரவசனத்திற்கு எடுத்துக்கொண்ட விஷயம் ஸ்ரீ ராமாயண தாத்பர்ய ஸங்க்ரஹம், ஸ்ரீபாரத தாத்பர்ய ஸங்க்ரஹம் என்ற இவ்விரு நூல்களேயாகும். இவ்விரு நூல்களுக்கும் ஸ்ரீமத் தீக்ஷிதேந்திரர் அவர்களே வியாக்கியானமும் செய்துள்ளார். இந்த வியாக்கியானங்களும் கற்றவர்க்கேயன்றி மற்றவர்க்கு விளங்காவாகையால், இந்த வியாக்கியானத்தையும் அனைவர்க்கும் எளிதாக விளங்கும்படி பிரம்மஸ்ரீ சாஸ்திரிகள் அவர்கள் விரிவாக உபன்யாஸம் செய்தது கேட்டு அனைவரும் பரவசமடைவார்கள். அத்தகையோரில் அடியேனும் ஒருவன்.

4. பிரம்மஸ்ரீ சாஸ்திரிகளின் பிரவசனத்தினால் பரவசமடைந்த அடியவன், இவர்களைக்கொண்டே உரையெழுதுவித்து இந்த இரு ஸ்தோத்ரங்களையும் ஒரு நூலாகப் பிரசுரிக்க எண்ணினேன். அடியவன் இவ்வாண்டு பிரசுரித்த சிவஞான பூஜாமலரில் ஒரு இணைப்பு நூலாக இவற்றைப் பிரசுரிக்கவும் எண்ணினேன் ஆனால் பரமேச்வர சங்கல்பம் இந்த நூலின் சிறப்புபற்றி, ஒரு ஆண்டு மலரின் பகுதியாகாது, தனிநூலாகவே வெளிவரவேண்டும் என்று இருந்தமையால் அங்ஙனமே வெளிவருகிறது.

5. ஸ்ரீமத் தீக்ஷிதேந்திரர் அவர்களின் முழு வியாக்கியானத்தையே மூலத்துடனும், உரையுடனும், மேற்கோள்களின் விளக்கத்துடனும் பிரசுரிக்க நினைத்தும், பிரம்மஸ்ரீ சாஸ்திரிகளுக்கு அத்தகைய பெரும் பணியை மேற்கொள்ள ஒய்வின்மையால் ஸ்தோத்திரம் மட்டும் மூலத்துடன் பொழிப்புரையும், வியாக்கியானத்தின் ஸாரமான விளக்கத்துடனும் அவர்கள் எழுதிக்கொடுத்தார்கள். அதுவே தற்சமயம் நூல் வடிவத்தில் வெளியிடப்படுகிறது, ஆயினும் மேற்படி முழு

வியாக்கியானத்தையும் சிறிது சிறிதாகவாவது அடியனேது மற்றொரு வெளியீடான சிவஞான பூஜாமலரில் ஆண்டுதோறும் தொடர் கட்டுரையாகப் பிரசுரிக்கும் முறையில் எழுதிக் கொடுக்குமாறு வேண்டிக் கொண்டுள்ளேன். சிவகிருபை இதனை நிறை வேற்றிக் கொடுக்க வேண்டும்.

6. நூலாசிரியரான ஸ்ரீமத் அப்பய்ய தீக்ஷிதேந்திரர் அவர்களது பெருமையை அடியவன் பிரசுரித்துள்ள ஸ்ரீமத் அப்பய்ய தீக்ஷிதர் திவ்ய சரித ஸங்க்ரஹம் (பிரம்மஸ்ரீ மஞ்சக் குடி ராஜகோபால சாஸ்திரிகள் எழுதியது) என்ற நூலில் விரிவாகக் காணலாம். உரையாசிரியர் பிரம்மஸ்ரீ வரஹூர் கல்யாணஸுந்தர சாஸ்திரிகளைப்பற்றி மட்டும் சில வார்த்தை கள் இங்கு கூற விரும்புகிறேன். பிரம்மஸ்ரீ சாஸ்திரிகள் வட மொழி என வழங்கும் ஸம்ஸ்க்ருத பாஷையாகிய பெருங்கட லின் கரையை மட்டுமன்றி அதன் ஆழத்தையும் கண்டறிந்த வர்கள். வேதாந்த சாஸ்திரத்தின் நுட்பத்தை நன்கு அறிந்து போதிப்பவர்கள். சென்னையில் சுமார் 40 ஆண்டுகளாக வேதாந்த பிரவசனங்கள் செய்து வருகின்றவர்கள். ஸ்ரீகாஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீமத் சங்கராசாரிய ஸ்வாமி களால் "பாஷ்யபாவக்ஞ" என்ற சிறப்புப்பட்டம் அளிக்கப் பெற்றவர்கள். சென்னை விவேகானந்தர் கல்லூரியில் ஸம்ஸ் கிருதத்துறையில் விரிவுரையாளராகப் பணியாற்றிப் பின்னர் U. G. C. பேராசிரியராக ஓய்வு பெற்றவர்கள் (University Grants Commission Professor) ஸம்ஸ்க்ருத மொழிப்புலமைக் காக ஜனாதிபதி பரிசு (PRESIDENT AWARD) பெற்றவர் கள். இடமின்மை கருதி இத்துடன் நிறுத்திக் கொள்கிறேன்.

7. இந்தநூல் வெளிவரப் பொருளுதவி செய்த இருவரில் ஒருவர் ஸ்ரீமத் அப்பய்ய தீக்ஷிதர் வம்ஸத்தில் 12வது தலை முறையில் தோன்றிய ஸ்ரீமான் Y. ஸாம்பமூர்த்தி, B. A., ஆவர். இவர் இதே வம்சத்தில் 9வது தலைமுறையைச் சேர்ந்த மஹாமஹோபாத்தியாய பிரம்மஸ்ரீ மன்னார்குடி ராஜு சாஸ்திரிகளவர்களின் ப்ரபௌத்திரரும், (கொள்ளுப்பேரன்)

11வது தலைமுறையினரான மஹாமஹோபாத்தியாய பிரம்மஸ்ரீ யக்ஞ ஸ்வாமி சாஸ்திரிகளவர்களுடைய நான்காவது புத்திரருமாவர். இத்தகைய பெருமை வாய்ந்த இவர் அளித்த நன்கொடை ரூ. 1500/= ஆகும். இவரே இந்த நூல்வெளியீட்டு விழாவில் முதல் பிரதியினைப் பெற்றுக் கொள்கின்றார்.

மற்றொருவர், உரையாசிரியர் பிரம்மஸ்ரீ வராஹமிஹிர் சாஸ்திரிகளவர்களிடம் பல்லாண்டுகளாக வேதாந்த பாடம் கேட்டு வரும் தலைசிறந்த மாணாக்கரும், சென்னையில் ரோட்டரிகிளப் போன்ற பல பொது ஸ்தாபனங்களில் ஈடுபட்டுச் சேவை செய்பவரும், பல சமயப்பணிகளுக்கும் பேருதவி செய்பவருமான ஸ்ரீமான் N. C. கிருஷ்ணன், F. C. A., (Chartered Accountant) ஆவர். இவர் அளித்த நன்கொடை ரூ. 500/= ஆகும். இவ்விரு பிரமுகர்களுடைய நன்கொடைப் பதிப்பாகவே இந்த நூல் வெளிவருகிறது. நூல் வெளியீட்டு விழாவில் ஸ்ரீமான் N. C. கிருஷ்ணன் அவர்களே நூலை வெளியீடும் பணியையும் மேற்கொள்கிறார்.

பதிப்புரை மிகவும் நீண்டு விட்டதால் உரையாசிரியர் அவர்கட்கும், நன்கொடையளித்த இரு பிரமுகர்களுக்கும், நூல் வெளியீட்டு விழாவுக்குத் தலைமைதாங்க இசைந்த பெரியவர் ஆஸ்திகரக்ஷாமணி ஸ்ரீமான் V. சின்னஸ்வாமி ஐயரவர்களுக்கும் அடியவனது ஹ்ருதய பூர்வமான நன்றிகளைத் தெரிவித்து இத்துடன் நிறுத்திக் கொள்கிறேன். எல்லாம் எனையாளும் ஈசன் செயல்,

இங்ஙனம்

சென்னை-600 033
25-9-1988

சங்கரனடிமை, சிவபக்திப்பிரசாரமணி
ஆங்கீரஸ சர்மா

சிவம்

சிவமயம்

ஸ்ரீ மஹாதேவ ஜயம்

# உரையாசிரியரின் முன்னுரை

அப்பய்யதீக்ஷிதேந்த்ரான் அசேஷவித்யாகுருனஹம் வந்தே ।
யத்க்ருதிபோதாபோதௌ வித்வதவித்வத்விபாஜகோபாதி ॥

எவர் இயற்றிய நூல்களை அறிந்தவன் அறிவாளி, அறியாதவன் அறிவாளியல்லனே, அத்தகைய கல்வியனைத்துக்கும் குருவாகிய ஸ்ரீமத் அப்பய்ய தீக்ஷிதேந்திரரவர்களை நான் வணங்குகிறேன் என்பது மேலேயுள்ள சுலோகத்தின் கருத்தாகும். இவ்வாறு தமது ஜீவியகாலத்திலேயே பண்டிதர்களால் போற்றப்பட்ட ஸ்ரீமத் அப்பய்ய தீக்ஷிதர் 'தொண்டை நன்னாடு சான்றோருடைத்து' என்ற முதுமொழிக்கிணங்க நமது தொண்டை நாட்டில் வடாற்காடு மாவட்டம் ஆரணிக்கருகில் உள்ள அடையப்பலம் என்ற சிற்றூரில் கி. பி. 1520ல் அவதரித்தார். உலகத்தில் சைவ சாஸ்திரப் பயிற்சி குன்றும் போது அதை மேம்படுத்த சிவபிரானின் அம்சமாக தீக்ஷிதர் அவதரித்தார் என்ற விஷயம் சிவரஹஸ்ய இதிஹாஸம் 9ம் அம்சத்தில் கூறப்பட்டுள்ளதிலிருந்து தெரிந்து கொள்ளலாம்.

ஸ்ரீமத் தீக்ஷிதர் அவர்கள் அத்வைதி, சிவபக்தியில் சிறந்தவர், எனினும் விஷ்ணு த்வேஷம் என்பதை அறியாதவர்கள். ஆயினும் அக்காலத்தில் விஷ்ணு பக்தர்கள் எனக்கூறிக் கொண்டு சில மதவாதிகள் சிவபெருமானைப் பலவாருக நிந்தை செய்ததைப் பொறுக்காதவராய்ப் பல நூல்களை இயற்றி சிவோத்கர்ஷத்தை நிலை நாட்டினார்கள். வைஷ்ணவர்கள் அக்காலத்தில் சிவ நிந்தை செய்ததற்கு "ஹரி: பரதர:" "கிங்கரா: சங்கராத்யா:" என்பனபோன்ற அவர்களது வசனங்களே அத்தாட்சியாகும்.

இவர்களது கூற்றெல்லாம் பொய்யானதே, உண்மையல்ல என்பதை வேதங்கள் இதிஹாஸ புராணங்கள் இவற்றின் துணைகொண்டு பரமேச்வரனின் மேன்மையை விளக்கும் பலதிறப்பட்டநூல்களை இயற்றி, அவைகளின் மூலம் நிலை நாட்டினார்கள். அதுமட்டுமன்றி விஷ்ணுவின் அவதாரமான ஸ்ரீராமனின் சரித்தத்தை விளக்குவதே இராமாயணம், ஸ்ரீ கிருஷ்ணனின் சரித்தத்தை விளக்குவதே மஹாபாரதம் என்று யாவராலும் கருதப்படும் இந்த இரு இதிஹாஸங்களுமே பரமேச்வரனின் உத்கர்ஷத்தை (மேலான பெருமை) விளக்குவதையே உட்கருத்தாகக் கொண்டவை என்பதை மிகமிகத் தெளிவாகத் தக்க ஆதாரங்களுடன் உலகிற்கு எடுத்துக்காட்ட ராமாயண தாத்பர்ய ஸங்க்ரஹ ஸ்தோத்ரம், பாரத தாத்பர்ய ஸங்க்ரஹ ஸ்தோத்ரம் என்ற இருநூல்களை இயற்றி அவற்றிற்கு விரிவான விளக்கமும் கொடுத்திருக்கிறார்கள். இவ்வாறு உள்ளுறை பொருளாக ஒரு விஷயத்தைத் தெரிவிப்பதே வ்யங்க்யம் அல்லது த்வனி என்ற அலங்காரமாகும். இதையுடையதே உத்தம காவியம் என்பதையும் விளக்கியுள்ளார்கள். இவ்வரு நூல்களையுமே ஸ்ரீமத் அப்பய்ய தீக்ஷிதர் ஜயந்தி காலங்களில் சிவபக்த சிகாமணியான ஆங்கீரஸ சர்மாவின் வேண்டுகோளுக்கிணங்கிப் பல விடங்களில் பிரஸங்கங்கள் செய்திருக்கிறேன். அவற்றைக்கேட்ட அவரே இவ்விஷயத்தை யாவரும் எளிதில் அறியவேண்டி தமிழ்உரை எழுதிக் கொடுக்கும்படி என்னைக்கேட்டுக்கொண்டதின் காரணமாக, ஸ்ரீமத் தீக்ஷிதர் அவர்களுடைய வியாக்கியானத்தைத் தழுவி நான் எழுதியுள்ள உரையுடன் இவ்விருநூல்களும் ஒரே புத்தகமாகத் தற்சமயம் வெளியிடப்படுகிறது. இவற்றைப்படித்து யாவரும் பயனடைய வேண்டுகிறேன்.

ஸ்ரீசங்கரப்ரஸாதா
65/2, பஸுல்லா சாலை
சென்னை-17,
15—9—1988

இங்ஙனம்
பாஷ்ய பாவக்ஞ
வரஹூர் கல்யாணஸுந்தர
சாஸ்திரிகள்

சிவம்

உ

சிவமயம்

ஸ்ரீ மஹாதேவ ஜயம்

# ஸ்ரீ ராமாயண தாத்பர்ய ஸங்க்ரஹ ஸ்தோத்ரம்*

# ॥ श्री रामायण तात्पर्य सङ्ग्रहस्तोत्रम् ॥

(ஸ்ரீமத் அப்பய்ய தீக்ஷிதேந்திரர் அருளியது).

தமிழ் விளக்கம் :

பாஷ்ய பாவக்ஞ வரஹூர் கல்யாணஸுந்தர சாஸ்திரிகள்

அவதாரிகை:—பிரம்மதேவனின் அருளால் எல்லா விஷயங்களையும் அறிந்துகொண்ட ப்ராசேதஸர் எனப்படும் வால்மீகி முனிவர் ஸ்ரீ ராமசரிதத்தை வர்ணிக்கும் தன்மை கொண்ட ஸ்ரீமத் ராமாயணம் என்னும் பெரிய காவியம் ஒன்றை எழுதினார். அதை எழுதிய அவர் அதன் கதாநாயக னை ஸ்ரீ ராமனின் வசனங்களைக் கொண்டும் தனது வசனங் களைக் கொண்டும் ஸகலமான தேவதைகளுக்கும் மேற்பட்ட வரான பரமேச்வரனின் மஹிமையைக் காவியத்தின் முக்கிய மான உட்பொருளாக வெளியிட்டிருக்கிறார் என்ற கருத்தை வெளியிடும் தன்மைவாய்ந்த இந்த சிவபிரானின் ஸ்தோத்ர மாயமைந்த இந்த நூலைத் தொடங்கும் ஸ்ரீமத் அப்பய்ய தீக்ஷிதேந்திரரவர்கள் இதில் சொல்லப்பட்டுள்ள விஷயம் யாதென்பதை முதலில் குறிப்பிடுகிறார்.

---

* ராமாயண ஸார ஸங்க்ரஹ ஸ்தோத்ரம் என்றும் வழங்கப்படுகிறது.

ச்லோகம்—1

वाल्मीकिरादिकविराट् अखिलार्थदर्शी
साक्षाद्विरिञ्च इव संप्रतिपन्नभावः ।
विश्वेश विष्णुमधिकृत्य कृते प्रबन्धे
व्यक्त्या तवैव निबबन्ध परं परत्वम् ॥ १ ॥

வால்மீகிராதிகவிராட் அகிலார்த்ததர்சீ
ஸாக்ஷாத்விரிஞ்ச இவ ஸம்ப்ரதிபன்னபாவ: ।
விச்வேச விஷ்ணுமதிக்ருத்ய க்ருதே ப்ரபந்தே
வ்யக்த்யா தவைவ நிபபந்த பரம் பரத்வம் ॥ 1 ॥

பொழிப்புரை:—உலகத்திற்கு ஈசனான பரமேச்வரனே! கவியரசருள் முதல்வரும், பிரமதேவன் போன்று எல்லா விஷயங்களையும் நேரில் அறியும் தன்மை வாய்ந்தவரும் சாஸ்திரங்களின் உட்கருத்தை நன்கு அறிந்தவருமான புற்றிலிருந்து தோன்றிய வால்மீகி மஹரிஷியானவர், விஷ்ணுவைப்பற்றி எழுதிய ராமாயணம் என்னும் தனது நூலில் வ்யஞ்ஜனை என்ற சப்த சக்தியால் தங்களுடைய மேலான பெருமையையே அமைத்துக் காட்டியிருக்கிறார்.

விளக்கம்:—ஹே பரமேச்வரா! பிரம்மதேவன் போன்று எல்லா விஷயங்களையும் நேரில் காணும் தன்மை வாய்ந்தவரும், சாஸ்திரங்களின் உட்கருத்தை அறிந்தவரும் கவிச்சக்ரவர்த்திகளுள் முதன்மையானவருமான வால்மீகி முனிவர் விஷ்ணுவின் சரிதத்தைச் சொல்லுவதற்காகத் தான் இயற்றிய ராமாயணத்தில் அதைக் கூறும் வாயிலாகத் தங்களுடைய மேன்மையையே உட்பொருளாக அமைத்துக் காட்டியிருக்கிறார்.

ச்லோகம்—2

முதன் முதலாக அகஸ்த்யாச்ரமத்துள் நுழையும் ஸமயத்தில் ஸ்ரீராமனின் வசனங்களைக்கொண்டும், கவியின் வசனங்

களைக்கொண்டும் மஹேசனின் மேன்மை வெளியிடப்பட்டுள்ள தென்பதை இந்த ச்லோகத்திஞல் விளக்குகிருர்.

रामायणे हि कलशप्रभवाश्रमस्था
देवादयोऽपि तमुपासत इत्युदीर्य ।
स्थानानि चात्र मधुजिन्मघवन्मुखानां
तस्याश्रमे निगदितानि न ते कपर्दिन् ॥ २ ॥

ராமாயணே ஹி கலசப்ரபவாச்ரமஸ்தா
தேவாதயோபி தமுபாஸத இத்யுதீர்ய ।
ஸ்தாநானிசாத்ர மதுஜிந்மகவன்முகாநாம்
தஸ்யாச்ரமே நிகதிதாநி ந தே கபர்திந் ॥ 2 ॥

பொழிப்புரை:—ராமாயணத்தில் கலசத்திலிருந்து தோன்றியவரான அகஸ்தியருடைய ஆச்ரமத்திலிருக்கும் தேவர்களும் கூட அவரை உபாஸிக்கிருர்கள் என்று ராமர் வாயிலாகக்கூறி, அங்குள்ள தேவர்களின் இருப்பிடங்களைக் கூறுங்கால், கவியால் விஷ்ணு இந்திரன் முதலானவர்களின் ஸ்தானங்கள் மட்டுமே கூறப்பட்டுள்ளனவேயன்றி தங்களுக்கென ஒரு ஸ்தானம் இருப்பதாக ராமாயணத்தில் கூறப்படவில்லை.

விளக்கம்:—அகஸ்த்யாச்ரமத்தின் ஸமீபம் லக்ஷ்மணனைப் பார்த்துக் கூறிய ஸ்ரீராம வசனங்கள்:-

இங்கு தேவர்கள், ஸித்தர்கள், மஹரிஷிகள் யாவர்களும் ஆஹாரநியமத்துடன் கூடிய அகஸ்த்யரை எப்பொழுதும் உபாஸிக்கின்றுர்கள். இங்கு தேவர்கள் யக்ஷர்கள் நாகர்கள் பன்னகர்கள் தர்மம் செய்ய விரும்பியவர்களாய் ஆஹார நியமத்துடன் இங்கு வசித்துவருகிருர்கள்.

அகஸ்த்யாச்ரமத்தில் நுழைந்த பிறகு கவிவசனங்கள்:- அங்கு பிரம்மா - அக்னி - விஷ்ணு - இந்திரன் - ஸூரியன் ஸோமன் - குபேரன் - தாதா - விதாதா - வாயு - வருணன் -

காயத்ரீ - வஸுக்கள் - நாகராஜனுன அனந்தன் - கார்த்தி கேயன் - தருமன் இவர்களுடைய ஸ்தானங்களை ஸ்ரீராமர் பார்க்கிறுர் என்பனவாம். இவ்வாறு அகஸ்தியரை தேவர்கள் உபாஸிக்கிறுர்கள் என்றும் இன்னின்ன ஸ்தானங்களை ஸ்ரீராமர் பார்த்தார் என்றும் கூறுபவர்கள் வேருயினும் காவி யத்தை எழுதியவர் ஒருவரேயாகையால் சொல்லி சொல்லப் பட்டன என்று கூறப்பட்டுள்ளது. இவ்விடம் அகஸ்த்யரை ஸேவிக்கவரும் பிரம்மா முதலியவர்களின் வாஸஸ்தானங்கள் கூறப்பட்டன. அவ்வாறே முன்பு தொடங்கியிருப்பதே அதற் குக் காரணமாகும்.

மேலும் உத்தரராமாயணத்தில் சம்புகனை ராமன் கொன்றபின் ஸ்ரீராமனைக் காண ஸ்வர்கத்திலிருந்து விமானங் களில் வந்த தேவர்கள் மஹாத்மாவான அகஸ்த்யரின் ஆச்ர மத்தைக் காண்போம் என்று சொன்னதாகக் கூறி, கூறிய படியே அகஸ்த்யரை வணங்க அவர்கள் அவ்விடம் சென்றுர் கள் என்றும் சொல்லி, அவ்விடம் வந்திருந்த ச்வேதன் என் னும் அரசன் பசிதாகமென்னும் மஹாரோகத்துக்குப் பரிஹா ரம் என்னவென்று கேட்கத் தேவர்களையே காப்பாற்றும் வல் லமை கொண்ட அகஸ்த்யர் உன்னைக் காப்பாற்றுவார் என் னும் வசனத்தாலும் அகஸ்த்யரை எல்லாத் தேவர்களும் உபா ஸிக்கிறுர்கள் என்னும் விஷயம் தெளிவாகக் கூறப்பட்டுள்ளது.

இத்தகைய பெருமை வாய்ந்த அக்ஸ்த்யரை ஸேவிக்க அவரது ஆச்ரமத்தில் வசிக்கும் பிரம்மா முதலான தேவர் களுக்கு ஸ்தானங்கள் குறிப்பிடப்பட்டனவே அன்றி, பரமேசு வரனுக்கு அங்கு ஸ்தானம் குறிப்பிடப்படவில்லை. அதிலிருந்து பிரம்மா விஷ்ணு முதலானவர்களே அகஸ்த்யரை உபாஸிக் கிறுர்கள், சிவபெருமான் அவ்விதம் உபாஸிக்கவில்லை என் பதை வெளிப்படுத்தும் வாயிலாக சிவபெருமான் எல்லோரை யும் விட மேலானவர் என்ற கருத்து அறிவிக்கப்பட்டிருக் கிறது.

ச்லோகம்—3

இதனால் மட்டுமல்ல, வேறு முறையிலும் இக்கருத்து அறியப்படுகிறது என்று அடுத்தபடி கூறுகிறார்.

तेनत्वमेव ननु सिद्ध्यसिपारिशेष्या-
त्तस्येन्दुशेखर तपोनिकरैरुपास्यः ।
तस्याप्युपासकतया विनिवेशितेभ्यः
तेभ्यस्तवत्वतितरां महिमा प्रसिद्ध्येत् ॥ ३ ॥

தேநத்வமேவ நநு ஸித்யஸிபாரிசேஷ்யாத்
தஸ்யேந்துசேகர தபோநிகரைருபாஸ்ய: ।
தஸ்யாப்யுபாஸகதயா விநிவேசிதேப்ய:
தேப்யஸ்தவத்வதிதராம் மஹிமா ப்ரஸித்யேத் ॥ 3 ॥

பொழிப்புரை:—சந்திரனைச் சிரோபூஷணமாக அணிந்திருக்கும் ஹே பரமேச்வரா! அதனால் தாங்களே பாரிசேஷ்யம் என்னும் நியாயத்தைக் கொண்டு அகஸ்த்யருக்குத் தவம் முதலியவைகளால் உபாஸிக்கத்தக்கவராக இருக்கின்றீர்கள் என்பது ஸித்திக்கின்றது. மற்றவர் யாவரும் அகஸ்த்யரை உபாஸிக்கிறவர்களாய் உள்ளதால் அவரை உபாஸிக்காத தாங்களே அவருக்கு உபாஸ்ய தெய்வமாக இருக்க வேண்டும் என்பது கருத்து. தங்களை உபாஸிக்கும் அகஸ்த்யரையே உபாஸிக்கும் மற்றெல்லாத் தேவர்களைக்காட்டிலும், அவர்களால் உபாஸிக்கப்படும் அகஸ்த்யராலேயே உபாஸிக்கப்படும் தங்களுக்கே மேன்மை ஸித்திக்கின்றது என்பதைச் சொல்லவும் வேண்டுமோ!

விளக்கம்:—சிவபிரானைத் தவிர ஏனைய எல்லாத் தேவர்களாலும் உபாஸிக்கப்படும். அகஸ்த்யருக்குத் தவம் முதலியவற்றால் உபாஸிக்கத்தக்க தெய்வம் சிவபெருமான் ஒருவரே என்பது பாரிசேஷ்யம் என்னும் நியாயத்தால் அறியப்படு

கின்றது. சிவபெருமானை உபாஸிக்கும் அகஸ்த்யரையே உபாஸிக்கும் தேவர்களுக்கு சிவபிரானும் உபாஸிக்கத்தக்கவர் என்பதால் அவர்கள் யாவரையும் காட்டிலும் சிவபெருமானே மேலானவர் என்பது ஸித்திக்கின்றது.

ச்லோகம்—4

மேலும் லவணாசுரன் என்பவனைக் கொல்வதற்காகச் சத்து ருக்னனை அனுப்பும் பொழுது ஸ்ரீராமனால் அவனைக் கொல்லும் பொருட்டு வைஷ்ணவாஸ்த்ரம் ஒன்று கொடுக்கப்பட்டு அதன் பெருமை "ஹே சத்துருக்ன! இந்த அஸ்திரத்தை உபயோ கித்தால் எல்லாப் பிராணிகளுக்குமே பெரியபயம் ஏற்படும் எனக்கருதி ராவணனைக் கொல்வதற்காகக் கூட முன்பு நான் இதை உபயோகிக்கவில்லை" என்று வர்ணிக்கப்பட்டுள்ளது. அவ்வாறே சத்ருக்னன் லவணனைக் கொல்ல அதை உபயோ கித்த பொழுது உலகம் எல்லாம் நடுங்கப் பயந்து தன்னை யடைந்த தேவர்களைப் பார்த்து பிரம்மதேவன் சொல்லிய வச னத்தாலும் அந்த அஸ்திரத்தின் பெருமை விளக்கப்பட்டுள்ளது "லோக கர்த்தாவான விஷ்ணுவினுடைய அஸ்திரம் இது. மதுகைடபன் என்ற இரு அசுரர்களைக் கொல்வதற்கென இந்த அஸ்திரம் அந்த தேவனால் சிருஷ்டிக்கப்பட்டது. இது விஷ்ணுவின் தேஜஸ்ஸின் அம்சமானது. ஆகவே தான் உங் களுக்குப் பயம் ஏற்பட்டது" என்று (இது பிரம்மதேவன் கூறியது).

இத்தகைய அஸ்திரத்தைக் கொடுக்கும் பொழுதும் ஸ்ரீராமன், "சிவபெருமானருளால் லவணாஸுரன் பெற்றுள்ள சூலாயுதம் அவன் கையிலிருக்கும் வரையில் எந்த வழியிலும் எவராலும் அவனை வெல்ல முடியாது. ஆகவே அது அவன் கையிலில்லாத ஸமயம் பார்த்து என் அஸ்திரத்தைக் கொண்டு அவனைக் கொல்லவேண்டும்" என்று உபதேசித்து அதனை விளக்குவதற்காக ஸ்ரீமானான நீலகண்டரின் செயல் யாராலும் மீறக்கூடியதல்ல (ஸ்ரீமத: சிதிகண்டஸ்ய க்ருத்யம் ஹி துரதிக்ரமம்") என்று கூறப்பட்டுள்ளது. இதனாலும் சிவ

பிரானது ஒப்புயர்வற்ற உத்கர்ஷம் (மேன்மை) ஸித்திக்கின்றது என்பதை இந்த ச்லோகத்தின் மூலம் தீக்ஷிதர் கூறுகிறார்.

अत्यन्तपूज्य विषयं किलयत्प्रसिद्धं
श्रीमद्विशेषणमिदं हरिमूर्तिरूपात् ।
अस्त्रात्वदाप्तमधिकं किमपि त्रिशूलं
व्यङ्क्तुं त्वयीव न परत्र निवेशितं तत् ।। ४।।

அத்யந்தபூஜ்ய விஷயம் கிலயத்ப்ரஸித்தம்
ஶ்ரீமத்விசேஷணமிதம் ஹரிமூர்த்திரூபாத் ।
அஸ்த்ராத்வதாப்தமதிகம் கிமபி த்ரிசூலம்
வ்யங்க்தும் த்வயீவ ந பரத்ர நிவேசிதம் தத் ।। 4 ।।

பொழிப்புரை:—மிக்க மஹிமை வாய்ந்தவர்களிடம் உபயோகப்படுத்தப்பட வேண்டிய 'ஶ்ரீமத்' என்ற விசேஷணம் ஶ்ரீராமனால் "ஶ்ரீமத: சிதிகண்டஸ்ய" என்று தங்களிடம் உபயோகிக்கப்பட்டுள்ளது. அது சத்துருக்னனிடம் லவணாசுரனைக் கொல்வதற்காகத் தான் கொடுத்துள்ள வைஷ்ணவாஸ்திரத்தைக் காட்டிலும், லவணன் செய்த தவத்தால் மகிழ்ந்து அவனிடம் தன்னைக் காப்பாற்றிக் கொள்வதற்காகத் தாங்கள் கொடுத்துள்ள திரிசூலம் மிக மஹிமை வாய்ந்தது எனக் குறிப்பிடுவதற்காகவே ஆகும். அந்த விசேஷணம் தங்களிடத்தில் போல மற்றவர்களிடம் உபயோகப்படுத்தப்படவில்லை.

விளக்கம்:—வைஷ்ணவாஸ்திரமானாலும் சிவபெருமானால் கொடுக்கப்பட்ட சூலம் இல்லாத ஸமயம் பார்த்தே லவணாசுரன் கொல்லத்தக்கவன் என்ற சொல்லாலும், அதை விளக்க சிவாக்ஞை மீறக் கூடியதல்ல என்ற சொல்லாலும் சிவபெருமானின் மேன்மை தெளிவாகத் தெரிகிறது. ஶ்ரீமான் என்ற அடைமொழியாலும் அது பிரகாசமாகிறது எனவும் சொல்லப்படுகிறது. இவ்விடம் அந்த அடைமொழியானது "ஶ்ரீமான்

சத்ரு நிபர்ஹணः" "ஷடர்த்த நயனः ஸ்ரீமான்" என்பன போன்ற இடங்களில் போல் அழகை மட்டும் குறிக்கவில்லை. மிக மிக மேம்பட்டவர் என்னும் கருத்திலேயே அவ்வாறு கூறப்பட்டுள்ளது என்று கொள்ளவேண்டும். ஆகவே இந்த அடைமொழியாலும் சிவபெருமானின் உத்கர்ஷம் ஸித்திக்கின்றது.

ச்லோகம்—5

कुम्भोद्भवस्य सुरसंसदुपास्यता च
श्रीमद्विशेषणमिदं च तवेन्दुमौले ।
श्रीरामचन्द्र वचनेष्विति तन्निबन्धः
तस्यापि भक्तिमधिकां भवति व्यनक्ति ॥५॥

கும்போத்பவஸ்ய ஸுரஸம்ஸதுபாஸ்யதா ச
ஸ்ரீமத்விசேஷணமிதம் ச தவேந்துமௌலே ।
ஸ்ரீராமசந்த்ர வசனேஷ்விதி தந்நிபந்த:
தஸ்யாபி பக்திமதிகாம் பவதி வ்யனக்தி ॥ 5 ॥

பொழிப்புரை:—சந்திரனைத் தலையில் கொண்ட சிவபெருமானே! முன்கூறியபடி அகஸ்தியரைத் தங்களைத் தவிர எல்லாத் தேவர்களுமே உபாஸிப்பவர்கள் என்றும், ஸ்ரீமான் சிதிகண்டன் என்றும் ஸ்ரீராமனே கூறியிருப்பதிலிருந்தே அவருக்குத் தங்களிடம் மேலான பக்தி இருக்கிறது என்பது வெளிப்படுகிறது.

ச்லோகம்—6

இனி ஸ்ரீராமனின் வேறு வசனம் கொண்டும் அவருக்கு சிவபிரானிடம் பக்தியுள்ளது என்பது இந்த ச்லோகத்தின் மூலம் எடுத்துக்காட்டப்படுகிறது.

यस्यास्ति हि स्म शिबिरं शिवदक्षिणाग्रे
कुक्षिगते जलनिधेर्नलसेतु क्लृप्त्यै ।
तस्मिन् जगद्विदित भूमनि सेतुबन्धे
पूर्वं प्रसन्न इति च त्वयि भक्तिमूचे ॥ ६ ॥

யஸ்யாஸ்தி ஹிஸ்ம சிபிரம் சிவதக்ஷிணாக்ரே
குக்ஷிம்கதே ஜலநிதேர்நலஸேது க்லுப்த்யை ।
தஸ்மிந் ஜகத்விதித பூமநி ஸேதுபந்தே
பூர்வம் ப்ரஸன்ன இதி ச த்வயி பக்திமூசே ॥ 6 ॥

பொழிப்புரை:—ஹே சிவபெருமானே! ஸமுத்திரத்தினுள் தெற்குக்கோடியில் ப்ரஸித்தமாயுள்ளதும், ராமசேனையின் கூடாரத்திற்கு இருப்பிடமாயிருந்ததுமான ஸேதுபந்தத்தில் ஸ்ரீராமன் நளசேதுவைக் கட்டுவதற்காகத் தாங்கள் அனுக்ரஹம் செய்தீர்கள் என்று அவரே கூறியிருப்பதிலிருந்தும் அவருக்குத் தங்களிடம் பக்தியிருக்கிறதென அறியப்படுகிறது.

விளக்கம்:—இலங்கையிலிருந்து திரும்பி வரும்பொழுது சீதையைப்பார்த்து ஸ்ரீராமன் கூறியுள்ள வசனங்கள்:-அழகிய முகத்தையுடையவளே! கடலைக்கடந்து அந்த இரவில் எங்கு நாங்கள் வஸித்தோமோ அந்தக் கடலின் ஒருபாகமான புண்ய தீர்த்தம் இது. விரிந்த கண்களையுடைய சீதையே! உன்னைக் காப்பாற்றுவதற்காக ஜலமயமான இக்கடலில் மிக அருமையான இந்த நளஸேது எனப்படும் இந்த அணையானது என்னால் கட்டப்பட்டது. ஹே சீதே! கலக்க முடியாததும், ஜலத்துக்கு இருப்பிடமானதும், கரையற்றதும், ஓசையெழுப்புவதும், சங்குசிப்பிகள் நிறைந்ததுமான இக்கடலைப் பார். இலங்கையை நோக்கிக் கடலைக்கடந்து கொண்டிருந்த ஹனுமான் களைப்பாறுவதற்காகக் கடலுள்ளிருந்து வெளிவந்த ஹிரண்யநாபம் என்னும் தங்கமயமான இந்த மலையைப் பார். இதன் மத்தியில் ஸேனைகளுக்காகக் கூடாரங்கள்

அமைக்கப் பெற்றன. பெரிய கடலினூடே ஸேதுபந்தம் எனப்படும் புண்யதீர்த்தம் காணப்படுகிறது. மூவுலகத்தோ ராலும் அது பூஜிக்கத் தக்கது, மிக பரிசுத்தமானது, ஈடு இணை யற்றது, மஹா பாதகங்களையும் போக்கவல்லது. இங்கு முன்பு மஹாதேவனான ப்ரபு பரமசிவன் எனக்கு அருள் புரிந்தார் (அத்ர பூர்வம் மஹாதேவ: ப்ரஸாதமகரோத் ப்ரபு:). இவ்விடம் அரக்கர்களுக்கு அரசனான விபீஷணன் என்னை வந்தடைந் தான்.

இங்கு முதற்ச்லோகத்தினால் கடலைக் கடந்தபின் அக் கரையிலுள்ள ஸமுத்ரஜலம் நுழையுமிடத்தில் ஸேனையின் அமைப்பு இருந்த இடம் குறிப்பிடப்பட்டுள்ளது. அதன்பின் மூன்று ச்லோகங்களால் தன்னால் கட்டுவிக்கப்பட்ட நளஸேது, கடல், மைனாகம் இவைகள் குறிப்பிடப்பட்டுள்ளன. அடுத்த அரைச்லோகத்தினால் நளஸேதுவைக்கட்ட எவ்விடத்தில் ஸேனையின் கூடாரம் அமைக்கப்பட்டிருந்ததோ அந்த இடம் குறிப்பிடப்பட்டுள்ளது. அது இலங்கை போன்று கட லிடையே துர்கமாய் அமைந்துள்ள மைனாகமன்று. முன்பு ஸமுத்திரத்தினுள் மூழ்கிக் கிடந்த அதனை அவ்வாறு குறிப் பிட முடியாது. அது வெளிப்பட்ட பின்பும் அதை துர்கமாக யாரும் உபயோகித்ததாகவும் பிரஸித்தியில்லை. துர்கமாகச் செய்யத்தக்கது அது எனக்கொள்வதும் முறையல்ல. கடலைத் தாண்டி ஓர் இரவு நாங்கள் எங்கு வஸித்தோமோ என்பது போல முந்தினதும் கூறப்படுவதே பொருத்தமானதாகும். ஆகவே அது ஸமுத்திரமத்தியிலிருப்பதாகச் சொன்னது மேலே கூறப்போகும் ஸேதுபந்தம் என்னும் அணையின் தெற்கு முனையில் உள்ள பிரதேசமாகக் கொள்ளவேண்டும். இல்லையெனில் ஸமுத்ரஜல மத்தியில் நளஸேதுவைக்கட்டும் வரையில் ஐந்து தினங்கள் ஸேனாநிவாஸம் பொருந்தாது. ஆகவே ஒன்றரை ச்லோகத்தினால் ஸேதுபந்தம் எனப்படும் யாவராலும் கொண்டாடப்படும் எல்லா வினைகளையும் போக்க வல்ல அணையே குறிப்பிடப்பட்டுள்ளது. அதற்கு அடுத்த அரை அடியில் அங்கு ஸ்ரீராமனால் பிரதிஷ்டை செய்யப்பட்ட

அவருக்கு வரமருளிய பரமேசுவரனின் அருளே அவ்வணைக்குக் கீழ்க்கூறிய பெருமைக்குக் காரணமெனப்பட்டுள்ளது. இவ்விஷயம் கூர்மபுராணத்தில் ராமோபாக்யானத்தில் ராவணனைக் கொன்றபின் திரும்பிவரும் செய்தியில் விளக்கப் பட்டுள்ளது.

ஸேதுவின் நடுவில் ஸ்ரீராகவன் பெரிய தேவனும், ஈசனும், யானைத்தோலை உடுத்தியவனும், நெற்றியில் சந்திர கலையைத் தரித்தவனுமான சிவபெருமானைப் பிரதிஷ்டை செய்தார். பார்வதியோடு கூடியவரும் லோகக்ஷேமத்தைக் கொடுப்பவருமான மஹாதேவன் பிரத்யக்ஷமாகி ஸ்ரீராமனுக்கு மேலான வரத்தைக் கொடுத்தார். "உன்னால் பிரதிஷ்டை செய்யப்பட்ட லிங்கத்தைத் தரிசிக்கும் மனிதர்கள் மஹா பாபங்களினின்றும் விடுபட்டுப் பரகதியை அடைவார்கள். இங்கு கடலில் மூழ்கி லிங்கதரிசனம் செய்பவர்களுடைய எல்லாப் பாபங்களும் நசித்துவிடும். மலைகளும் பூமியும் இந்த ஸேதுவும் எதுவரை இருக்குமோ அதுவரை நான் இங்கு மறைந்திருப்பேன். இங்கு செய்யும் வாஸம், தானம், தவம், சிராத்தம் எல்லாம் அக்ஷயபலமாக இருக்கும். இந்த லிங்கத்தை நினைத்தாலே அன்றைய பாவம் விலகும்".

வால்மீகி ராமாயணம் இப்பொழுதுள்ள ச்வேதவராஹ கல்பத்தினுடைய ராமவிருத்தாந்தத்தைக் குறிக்கின்றது. இதற்கு முந்தின லக்ஷ்மீகல்பத்திலான ராமவிருத்தாந்தத்தைக் கூறும் கூர்மபுராண விஷயத்தை "அத்ரபூர்வம்" என அனுவாதம் செய்வது பொருத்தமானதே. இங்கு முன்பு சிவபிரான் பிரஸன்னர் ஆனார் என்னும் சொல்லால் சிவபிரானிடம் ராமனுக்கு அநாதி ஸித்தமான சிறந்த பக்தி வெளியிடப்பட்டிருக்கிறது. இதனால் முன்பு எந்த ஸேதுபந்தத்தில் சிவபிரான் பிரஸன்னரானாரோ அங்கு அவருக்கு திவ்யமான ஒரு மந்திரத்தை நிர்மாணிக்க, அவரை ஸேவிக்க வந்து போவோருக்கு ஸௌகர்யமாக அந்த அணை நாற்கோணமாகச்செதுக்கப்பட்ட பாறைகளால் நிர்மாணிக்கப்பட்டது. நளஸேதுவுக்கு முன்பே

இந்த ஸேதுவானது பிரஸித்தமென்றும் பூஜிக்கப் பட்டதென்றும் சொல்லியிருப்பதாலும், சிவப்ரஸாதம் முன்பே கிடைத்ததாகச் சொல்லியிருப்பதாலும், சிவாலயத்தை நிர்மாணிப்பதற்காக ஸமுத்திரத்திற்குள் சிறிது தூரம் உள்சென்று உள்ள முறையில் அமைத்துள்ள இந்த ஸேதுபந்தம் நளசேதுவைக் காட்டிலும் வேறானதெனத் தோன்றுகிறது.

நளஸேதுவானது நாற்கோணமாகச் செதுக்கப்பட்ட பாஷாணங்களால் நிர்மாணிக்கப்பட்டதல்ல. மரங்கள், புதர்கள், கொடிகள், இவற்றோடு கூடிய மலைச்சிகரங்கள் பெரும் பாறைகள் இவற்றால் செய்யப்பட்டதென்று அறியப்படுகிறது. இது அவ்விடமே கூறப்பட்டுள்ளது. பின்னர் ராமனால் நான்கு பக்கங்களிலும் அனுப்பப்பட்ட பல சிறந்த வானரங்கள் ஸந்தோஷத்துடன் பெரிய காட்டினுள் புகுந்து மலைகளைப் பெயர்த்து மரங்களையும் முறித்து ஸமுத்திரத்தை நோக்கி இழுத்து வந்து ஸாலம், அச்வகர்ணம், மூங்கில், குடஜம், அர்ஜுனம், தாலம், திலகம், திமிசம், ஏழிலை, மற்றும் அசோகம் போன்ற மரங்களால் ஸமுத்திரத்தை நிரப்பின. மேலும் வேருடன் கூடிய ஸாலம், தாடிமம், தென்னை, விபீதகம், வகுளம், கருபம், நிம்பம் போன்ற மரங்களையும் பல இடங்களிலிருந்து பெயர்த்தெடுத்துக் கொண்டு வந்தார்கள். இவற்றைக் கொண்டும், பிறகு புல் முதலியவற்றைக் கொண்டும் வானரங்கள் அணையைக் கட்டின. இவ்வாறு மரங்களோடு கூடிய பாஷாணங்களால் கட்டப்பட்ட அந்த அணையானது அந்த ஸமயத்திற்கு ஸஞ்சாரயோக்யமானதே அன்றி கடலின்மேல் நிலைத்திருக்கும் அணையல்ல. இவ்வாறு ஸேது பந்தம் என்பது நளஸேதுவினும் வேறானதென அறிவாளிகளால் கொள்ளப்படவேண்டும்.

இவ்விடம் ஓர் ஐயம் எழலாம். அஃதாவது:-கூர்ம புராணத்தில் அணையின் நிலைத்த தன்மை கூறப்பட்டுள்ளது. அவ்வாறே ஸ்காந்தம் நாகர கண்டத்திலும் விபீஷணனைப் பார்த்து ஸ்ரீராம வசனம்:- "எனக்காக இவ்விடம் எந்த மனிதனாவது சிரமப்பட்டு வருவானானால் எந்த ராக்ஷஸனும் அவனைத்

கொல்லக்கூடாது. அவ்வாறு அரக்கர்களுக்கு நீ உத்தரவு இட வேண்டும். என் அணையைத் தாண்டி யாவரும் பூமியில் செல்லக்கூடாது''. இதற்கு விபீஷணனின் பிரதி வசனம்; 'கலியில் தரித்திரர்களான மனிதர்கள் தோன்றுவார்கள். அவர்களுள் தங்கத்தில் ஆசையினாலோ தேவதர்சனத்திற்காகவோ ராக்ஷஸ பயமின்றி இங்கு அவர்கள் வரக்கூடும். அவர்களை யாராவது ஒரு ராக்ஷஸன் கொன்றுவிட்டால் என்மேல் குற்றம் சாரும். எஜமானத் துரோகமும் செய்ததாக ஆகும். எனவே அந்த தோஷம் வராதபடி தாங்களே ஒரு உபாயம் செய்ய வேண்டும்'' என்பதாம். அதைக் கேட்ட ஸ்ரீராமன் அப்படியே செய்கிறேன் என்று கூறி வில்லைத் தயார் செய்து அம்புகளைக் கொண்டு மனிதர்கள் அங்கு வராதபடி அந்த அணையைப் பத்து யோஜனை அளவுக்குப் பிளந்துவிட்டார் எனக் கூறப் பட்டுள்ளதே என்பதேயாம்.

இது உண்மையேயாயினும், கூர்மபுராணத்தில் முந்தின கல்பத்தில் நடந்தது கூறப்பட்டுள்ளது என்று கூறினோம். நாகர கண்டத்தில் கூறப்பட்டதும் வேறொரு கல்பத்தில் நடந்ததே கூறப்பட்டுள்ளது. அவ்விடத்தில் வைகுண்ட யாத்திரைக்காகக் கூப்பிட தேவதூதன் வந்தபின், வைகுண்டம் செல்லத் தயாராக இருந்த ராமனும் புஷ்பக விமானத்தில் ஏறி கிஷ்கிந்தை வழியாக ஸுக்ரீவனோடு இலங்கை சென்று பல நாள் அங்கு தங்கி, திரும்பும் ஸமயத்தில் ஸேதுவின் தொடக்கம் நடுவு இறுதி பாகங்களில் ராமேச்வரர் எனப் பெயர் கொண்ட மூன்று சிவலிங்கங்களைப் பிரதிஷ்டை செய்து அங்கு கீழ்கூறியவாறு விபீஷணனுக்கு உபதேசம் செய்ததாக வர்ணிக்கப்பட்டுள்ளது. ஆகவே நடைமுறை வேறாக இருப்பதால் அதுவும் வேறு கல்பத்தைப் பற்றியதே. கல்பாந்தர ஸேதுவும் அந்த கல்பம் வரைதான் இருக்குமாதலால் அடுத்த கல்பத்தில் வேறு அணை கட்டுவதும் பொருத்தமானதே.

அத்யாத்மராமாயணத்திலோ ஸேதுவைக்கட்டத் தொடங்கிய ராமன் அங்கு ராமேச்வரர் என்ற சிவபிரானைப் பிரதிஷ்டை

செய்து உலகத்தின் நன்மைக்காகப் பூஜைசெய்தார். அங்கு சிவபெருமானைத் தரிசித்து ஸேதுவை எவன் வணங்குகிறுனே அவன் அப்பெருமானது அனுக்கிரஹத்தினுல் பிரம்மஹத்தி முதலான பாவங்களிலிருந்து விடுபடுகிருன் என்ற முறையில் நளஸேதுவைக் கட்டும்பொழுதே ராமேச்வரப் பிரதிஷ்டை வர்ணிக்கப்பட்டுள்ளது. திரும்பி வரும் பொழுது ஸீதையைப் பார்த்து இராமன் சொல்லும் கீழ் வரும் வசனங்களாலும் இது வலுப்பெறுகிறது.

''ஸமுத்திரத்தில் இந்த அணை என்னுல் கட்டப்பட்டது. பெருங்கடலில் மூவுலகாலும் பூஜிக்கப் பெற்ற ஸேதுபந்தம் என்னும் இந்த புண்ணியஸ்தலம் காணப்பெறுகிறது. பார்த்தாலே இது பாபத்தைப் போக்கும். மிகப் பரிசுத்தமானது. இவ்விடம் ராமேச்வரம் என்னும் சிவலிங்கம் என்னுல் பிரதிஷ்டை செய்யப்பட்டுள்ளது'' வேறு புராணத்தைப் பார்த்து இவ்விதம் வர்ணிக்கப்பட்டதா, 'ஸேது பந்த இதி' என்றும் வர்ணிக்கப்பட்ட வால்மீகி இராமாயண வசனத்தின் அபிப்ராயத்தை ஊகித்து வர்ணிக்கப்பட்டதா என்பது விளங்கவில்லை. ராமாயண வசனமும் நளஸேதுவைக் கட்ட ஆரம்பிக்கும்பொழுது ராமேச்வர பிரதிஷ்டை செய்யப்பட்டது என்று கொள்ளப்பட்டாலும் ஸேதுபந்தத்தை ஏற்படுத்தி அங்கு ராமேச்வர பிரதிஷ்டை செய்து அவ்விரண்டையும் தர்சனம் செய்வது மஹாபலம் என்று ஸ்ரீராமனுல் நியமிக்கப்பட்டது. அது முதல் இது மஹா பாதகநாசனம் என மூவுலகத்தாலும் பூஜிக்கப்பட்டது என்றும் ராவணவதம் ஈடேறுவதற்காக பரமேச்வரன் அருள்செய்தார் என்று கொள்வதும் பொருந்தும். இந்த பக்ஷத்தில் ராமேச்வர ஆலயம் வரை ஸேவைக்காக வருபவர்களுக்கு போக்குவரத்து அனுகூலமாக முன் கூறியவகையான பாஷாணங்களைக் கொண்டு ஸேது பந்தத்தை நிர்மாணித்து அங்கு படைவீடை அமைத்துக் கொண்டு அங்கிருந்து வானர ஸேனைகள் போய்வர அனுகூலமான நளஸேதுவை முன் கூறியபடி மரங்கள் முதலியவற்ருல் நளனைக் கொண்டு கட்டுவித்தார் எனக்கொள்ள வேண்டும்.

சிவாலயம் நிர்மாணிக்க சிறிது தூரம் கட்டப்பட்ட ஸேது பந்தம் சிவாக்ஞையால் வேறு கல்பத்திலும் இருக்கிறது எனவும் கொள்ள முடியுமானதால் பொருத்தமானதே என்பதால் முரண்பாடு ஒன்றுமில்லை. மஹாபாரதத்தில் கடலில் மற்றவர்களால் முன்பே தொடங்கப்பட்ட அணையைக் கட்டிமுடித்து கடலைத்தாண்டி வானரர்களால் சூழப்பட்டது என்று கூறியிருக்குமிடத்திலும் மற்றவர்கள் என்பது ராமனையே குறிக்குமென கொள்வதும் பொருத்தமாகும்.

வால்மீகி ராமாயணத்தில் முன் நடந்த செய்திகளைப் பின்னால் வெளியிடுவது என்ற முறை காகவிருத்தாந்தம், இலங்கையிலிருந்த ஸீதா தேவிக்கு பாயஸம் அனுப்பிய விருத்தாந்தம், அந்தக முனிவர் கொடுத்த தசரத சாப விருத்தாந்தம் போன்ற இடங்களில் காணப்படுகிறது. இவ்வாறு ஸேது பந்த விருத்தாந்தத்திலும் கொள்ளப்படலாம். பொதுவாக நளஸேது என்கிற பிற்காலத்திய விவகாரமும், இரண்டும் ஒன்று பட்டதாலும், நளஸேது பாகம் பெரும்பான்மையாக உள்ளதாலும் எனக் கொள்ளப்பட வேண்டும்.

ச்லோகம்—7

ஸ்ரீராமனின் சரித விசேஷங்களைக் கொண்டும், அவருக்குச் சிவபிரானிடத்தில் மிகுந்த பக்தி இருந்தது என்பதை வெளிப்படுத்தும் பொருட்டு அவைகளை மூன்று ச்லோகங்களால் எடுத்துக் காட்டுகிருர்.

श्रान्तस्सुदीर्घसमरेण रघुप्रवीर-
श्श्रान्ताकुलः कलशयोनिकृतोपदेशः ।
ब्रह्माच्युतत्रिणयनेश भवत्स्वरूपं
स्तोत्रेण यद्रिपुजयाय रविं प्रपन्नः ॥ ७ ॥

ச்ராந்தஸ்ஸ¬தீர்க்கஸமரேண ரகுப்ரவீர:
சிந்தாகுல: கலசயோநி க்ருதோபதேச: ।
ப்ரும்மாச்யுத த்ரிணயநேச பவத்ஸ்வரூபம்
ஸ்தோத்ரேண யத்ரிபுஜயாய ரவிம் ப்ரபன்ன: ॥ 7 ॥

பொழிப்புரை:—பிரம்மா, விஷ்ணு, உருத்திரன் இவர்களுக்கும் ஈசனுன மஹேசனே! நீண்டகாலம் யுத்தம் செய்து களைப்படைந்தவரும், கவலையை அடைந்தவருமான ஸ்ரீராமன், அகஸ்தியர் செய்த உபதேசப்படி சத்ருவான இராவணனைக் கொல்வதற்காக ஆதித்யஹ்ருதயம் என்னும் ஸ்தோத்திரத்தின் மூலம் ஆதித்யஸ்வரூபமான உங்களையே சரண் அடைந்ததிலிருந்தும் அவருக்கு உங்களிடமிருந்த பக்தி வெளியாகிறது.

விளக்கம்: — ராவணனோடு ராமன் யுத்தம் செய்யும் பொழுது யுத்தத்தில் களைப்படைந்து சிந்தாகுலராக இருக்கும் ராமனையும், யுத்தத்திற்காக எதிரே வந்து நிற்கும் ராவணனையும், யுத்தத்தைக் காண தேவர்களோடு அவ்விடம் வந்திருந்த பகவானுன அகஸ்த்ய மஹரிஷியானவர் பார்த்து ராமனிடம் சென்று சொல்லலானுர் எனத் தொடங்கும் அகஸ்த்யர் ராமனுக்கு செய்த ஆதித்யஹ்ருதய உபதேசத்தைக் கூற, ஸ்ரீ ராமன் அதை ஜபித்து அதிலுள்ள விச்வாஸத்தால் கவலை நீங்கி ஸந்தோஷத்துடன் யுத்தத்திற்குத் தயாரானுர் என்று விளக்கப்பட்டுள்ளது. ஆதித்யஹ்ருதயம் சிவபெருமானைப் பற்றியது. எப்படியெனில் பிரம்மா, ஈசானன், அச்யுதன் இவர்களுக்கு ஈச்வரன் எனத்தொடங்கி, இதைவிளக்க "ரௌத்ராய வபுஷே நம:" என்பதால் இந்த ஸ்தோத்ரத்துக்கு ஆதித்யனுள் அந்தர்யாமியாகவுள்ள சிவபெருமானே பொருள் எனக்காட்டப்பட்டுள்ளது. "நமோ ஹிரண்ய பாஹவே" என்றும், "அஸௌயஸ்தாம்ர:" என்றும், ந மோஹமாயன் மஹாமாய மோஹமாய" என்றும் தொடங்கும் உபாஸனார்த்தமான வேத மந்திரங்களும் சிவபரங்களாகவே காணப்படுவதால் வேதோபப்ரம்மணமான ராமாயணத்தில் சொல்லப்பட்டுள்ள ஆதித்ய ஹ்ருதயத்திற்கும் அவ்வாறே பொருள் கொள்வது தான் பொருத்தமாகும்

ச்லோகம்—8

रक्षोधिपो निहत एव दिवं प्रयाहि
कार्यं कृतं खलु नः इत्युदिते विधात्रा ।
राज्यस्थितः कुरुतुरङ्गममेधयज्ञ-
मित्युक्तमेवजगृहे तव यच्चशम्भो ॥ ८ ॥

ரக்ஷோதிபோ நிஹத ஏவ திவம் ப்ரயாஹி
கார்யம் க்ருதம் கலு ந: இத்யுதிதே விதாத்ரா ।
ராஜ்யஸ்தித: குருதுரங்கமமேதயக்ஞம்
இத்யுக்தமேவ ஜக்ருஹே தவ யச்ச சம்போ ॥ 8 ॥

பொழிப்புரை:—ராக்ஷஸாதிபஞன ராவணன் கொல்லப்பட்டான். எங்கள் கார்யம் நிறைவேற்றப்பட்டுவிட்டது. இனி தாங்கள் வைகுண்டம் போகலாம் என்று பிரம்மன் சொல்ல, இன்னும் சிறிது காலம் ராஜ்யத்திலேயே இருந்து அச்வமேதம் என்னும் வேள்வியைச் செய்து பின்னர் வைகுண்டம் போகலாமெனத் தாங்கள் சொல்ல, ஸ்ரீராமன் தாங்கள் சொல்லியபடியே நடந்துகொண்டார் என்பதிலிருந்தும் அவருக்குத் தங்களிடமுள்ள பக்தி வெளியாகின்றது.

விளக்கம்:—இராவணனைக் கொன்றபின் அக்னிப்பிரவேசம் செய்த ஸீதையை ஏற்றுக்கொள்ளும்படி செய்யவந்த தேவர்களுள், பிரம்மா இராமனைப்பார்த்து, "தர்மம் செய்பவர்களுள் சிறந்த உன்னுல் இராவணன் கொல்லப்பட்டான். எங்கள் காரியமும் செய்யப்பட்டது. இனி, நீ வைகுண்டம் செல்லலாம்" எனக்கூறிஞர். பிறகு சிவபெருமான் இராமனைப் பார்த்து, "நீ அயோத்தியை அடைந்து, ராஜ்யத்தை ஏற்று, ஜனங்களைச் சமாதானப்படுத்தி, அச்வமேதம் என்ற யாகத்தைச் செய்து பெருமையுற்று, பிராம்மணர்கட்கு தானங்களைக் கொடுத்துப் பின்னர் வைகுண்டம் செல்லலாம்" என்று சொன்ஞர். அப்பொழுது இராமன் பிரம்மா சொன்னதை ஏற்காமல்,

சிவபெருமான் சொன்னதையே ஏற்று நடந்தார். அச்வமேத யாகம் செய்து சிவபிரானையே ஆராதித்தார்.

ச்லோகம்:—9

इक्ष्वाकुवंश भवराज्यपदे निविष्टः
त्वामेव यच्च सुचिरं हयमेधक्लुप्त्या ।
ईजेकथान्तर गिरा शिवतेन चक्री
यष्टव्य इत्यवरजस्य निरस्य भावम् ॥ ९ ॥

இக்ஷ்வாகுவம்ச பவராஜ்யபதே நிவிஷ்ட:
த்வாமேவ யச்ச ஸுசிரம் ஹயமேதக்லுப்த்யா ।
ஈஜேகதாந்தர கிரா சிவதேன சக்ரீ
யஷ்டவ்ய இத்யவரஜஸ்ய நிரஸ்ய பாவம் ॥ 9 ॥

பொழிப்புரை:—அதுசமயம் சில உதாரணங்களைக்காட்டி அச்வமேத யாகத்தால் விஷ்ணுவே பூஜிக்கத்தக்கவர் என லக்ஷ்மணன் சொல்ல, வேறு சில உதாரணங்களைக் காட்டி சிவபிரானே பூஜிக்கத்தக்கவர் என்று கூறி அதன்படியே ஸ்ரீராமன் தங்களையே பூஜித்ததிலிருந்தும் அவருக்குத் தங்களிடம் இருந்த பக்தி வெளியாகிறது.

விளக்கம்:—இவ்விஷயம் எப்படி அறியப்பட்டதென்றால் அச்வமேதயாகத் தொடக்கத்தில் சில விஷயங்களைக் கூறி லக்ஷ்மணன் அச்வமேதத்தால் விஷ்ணுவே முன்னோர்களால் ஆராதிக்கப்பட்டார்; ஆகவே இப்பொழுதும் அப்படியே செய்யப்பட வேண்டும் என் எண்ணுவதை அறிந்த ஸ்ரீ ராமன் வேறு பல விஷயங்களைச் சொல்லி, சிவபிரானே யாவருக்கும் கதி, அச்வமேதமே அவருக்கு மிகப் பிரியமானது எனக் கூறி, தானும் அவரையே அதன் மூலம் ஆராதிக்கப் போவதான தன் கருத்தை வெளியிட்டார். ருத்விக்குகளும் அவ்வாறே செய்தனர் என்பது, அவர்கள் ஸ்ரீ ராமனின் வசனப்படியே சிவபிரானை வணங்கி அச்வமேதம் செய்து சிவபிரானை ஆரா

தித்தார்கள் எனக் கூறும் ச்லோகத்திஞல் அறியப்படுகிறது. ஆகவே ஸ்ரீ ராமன் சிவபெருமானையே ஆராதித்தார் என்பது தெளிவு.

ச்லோகம்—10

வால்மீகி மஹரிஷிக்கும் சிவபெருமானின் பெருமையையே கூறுவதில்தான் நோக்கம் என்பது இந்த ச்லோகத்திஞல் கூறப்படுகிறது.

एतैस्त्वयि प्रकटिता रघुनन्दनस्य
भक्तिः स्थिरा परतरत्वमतिश्चनित्या ।
सुव्यक्तमादिकविना स्वयमात्मनश्च
रुद्रस्सविष्णुरिव चेत्युपमोक्तिभङ्ग्या ॥१०॥

ஏதைஸ்த்வயி ப்ரகடிதா ரகுநந்தனஸ்ய
பக்தி: ஸ்திரா பரதரத்வமதிச்சநித்யா ।
ஸுவ்யக்தமாதிகவிநா ஸ்வயமாத்மநச்ச
ருத்ரஸ்ஸவிஷ்ணுரிவ சேத்யுபமோக்திபங்க்யா ॥ 10 ॥

பொழிப்புரை:—இவ்வாறு ஸ்ரீ ராமனுக்குத் தங்களிடம் மிகுந்த பக்தி இருந்தது எனப் பலவகைகளில் விளக்கித் தனக்கும் தங்களிடமே பக்தி உள்ளது என்பதையும் "க்ருதாபிஷேகோ கிரிராஜ புத்ர்யா ருத்ர: ஸ விஷ்ணுர் பகவாநிவேச:" என ராமனுக்குத் தங்களை உபமானமாகக் கூறுமாற்ருல் வெளிப்படுத்தி இருக்கிருர்.

விளக்கம்:-கோதாவரி நதியில் ஸ்நானம் செய்து ஸ்ரீராமன் ஸீதையோடும் லக்ஷ்மணஞேடும் கூடி பார்வதிதேவியுடனும் விஷ்ணுவுடனும் கூடிய சிவபெருமான் போல் விளங்கிஞர் என்று கூறியிருக்கும் உவமையிலிருந்தும் சிவபெருமான் சிறந்தவர் என்பதை வெளியிட்டுள்ளார். உபமேயத்தைக்காட்டிலும் உபமானம் சிறந்ததென்பது யாவரும் ஒப்புக்கொண்டுள்ள

விஷயமாகும். (தற்காலத்திய அச்சிட்ட ராமாயணப்பிரதிகளில் விஷ்ணுவுக்குப் பதில் நந்தி என்ற பாடம் காணப்படுகிறது.)

ச்லோகம்—11

சிவபெருமானே ஸர்வ லோக நியந்தா என்றும் கவி (வால்மீகி) அபிப்பிராயப்பட்டிருக்கிறார் என்பதையும் காரணங்களுடன் தீக்ஷிதர் விளக்குகிறார்.

संवत्सरं वरद वासयितुं प्रवृत्तः
सीतां दशाननगृहे जगतां नियन्तुः ।
संकल्प एव तव तद्वसतेरबोधे
रामस्य हेतुरिति भावममुष्य मन्ये ॥ ११ ॥

ஸம்வத்ஸரம் வரத வாஸயிதும் ப்ரவ்ருத்த:
ஸீதாம் தசாநநக்ருஹே ஜகதாம் நியந்து: |
ஸங்கல்ப ஏவ தவ தத்வஸதேரபோதே
ராமஸ்ய ஹேதுரிதி பாவமமுஷ்ய மன்யே || 11 ||

பொழிப்புரை:—இராவணனின் இருப்பிடத்தை அறிய ஸ்ரீராமன் பல முயற்சிகள் செய்தும் அதை அவர் அறிய முடியாமல் போனதற்கு, ஒரு வருஷ காலம் ஸீதையை இராவணனது க்ருஹத்தில் வசிக்கும்படிச் செய்ய வேண்டுமென்ற தங்களது ஸங்கல்பமே காரணமென வால்மீகி நினைத்தார் என நினைக்கிறேன்.

ச்லோகம்—12

ஸீதைக்கும் ஸ்ரீராமனுக்கும் ஏற்பட்ட பிரிவை ஒருவருஷ காலம் தொடரச் செய்ய வேண்டும் என்று எண்ணிய பரமேச்வரனின் ஸங்கல்பமே இராவணனின் இருப்பிடத்தை உடனே அறிய வேண்டுமென எண்ணியும் ஸ்ரீராமனால் அறிய முடியாமல் போனதற்குக் காரணமென வால்மீகியின் மனதிலிருந்தது

என்பது எப்படி அறியப்படுகிறது எனில் அந்த இராவணனது இருப்பிடம் எது எனப் பரிவுடன் கேட்கப்பட்டவர்களும் அதை அறிந்திருந்தவர்களுமான ஜடாயு, கபந்தன், ஸுக்ரீவன் இவர்களால் அதற்குப் பதில் கூறப்படாமல் போனதே காரணம். அதாவது அவ்வித சூழ்நிலையைக் கவி வர்ணித்திருப்பதே காரணமெனக் கொள்ள வேண்டும். அது முன் கூட்டியே அறியப்படுமானால் பரமேச்வரனின் ஸங்கல்பம் பொருந்தாமற்போய்விடும் என்னும் விஷயத்தை மேலே மூன்று ச்லோகங்களால் தீக்ஷிதர் கூறுகிருர்.

सीतापहारमवलोक्य रघूत्तमाय
ब्रूयुर्नजात्विति मुनिः विदितत्वदाज्ञः ।
पृष्टो यदस्य रघुचन्द्रमसा निवासं
उक्त्वागतः खगपतिः कियदन्यदन्यत् ॥ १२ ॥

ஸீதாபஹாரமவலோக்ய ரகூத்தமாய
ப்ரூயுர்நஜாத்விதி முநி: விதிதத்வதாக்ஞ: ।
ப்ருஷ்டோ யதஸ்ய ரகுசந்த்ரமஸா நிவாஸம்
உக்த்வாகத: ககபதி: கியதந்யதன்யத் ॥ 12 ॥

பொழிப்புரை:—ஸீதாபஹரணத்தை நேரில் பார்த்தவர்களும் இராமனுக்கு அவ்விஷயத்தை விவரமாக உடனே சொல்லக்கூடாது என்ற தங்களது ஸங்கல்பத்தை அறிந்தே வால்மீகி முனிவர் இராவணனது இருப்பிடத்தை இராமன் ஜடாயுவிடம் கேட்டும் அதை அறிந்த ஜடாயு அதைக் கூருமல் எதை எதையோ சொல்லி விட்டு கடைசியில் இறந்து விட்டதாகவே வர்ணித்து விட்டார்.

விளக்கம்:—ஸ்ரீராமன் ஜடாயுவை சந்தித்த ஸமயத்தில் கேள்வி பதில்கள் பின்வருமாறு காணப்படுகின்றன. "ஹே ஜடாயுவே, உனக்குப்பேசும் திறனிருக்குமாகுல் ஸீதையைப் பற்றியும், உன் வதத்தைப் பற்றியும் என்னிடம் கூறு,

இராவணன் ஏன் ஸீதையை அபகரித்தான்? அவனுக்கு நான் செய்த இடையூறு யாது? அந்த சமயம் ஸீதையின் முகம் எப்படியிருந்தது? அப்பொழுது ஸீதை என்ன சொன்னாள்? இராவணனின் வீரியம் என்ன? அவன் தோற்றம் எத்தகையது? அவன் செயல் எப்படிப்பட்டது? அவன் இருப்பிடம் எது? எல்லாவற்றையும் எனக்குச் சொல்லு'' என ஸ்ரீராமன் கேட்க, அவ்வாறு புலம்பும் ஸ்ரீராமனைப்பார்த்து சோர்ந்திருந்த ஜடாயு, தழதழத்த குரலில் இவ்வாறு கூறுகின்றது. ''மாயாவியான இராவணனால் ஸீதை ஆகாய மார்க்கமாகத் தூக்கிச் செல்லப்பட்டாள். அப்பொழுது நான் அதைத் தடுக்க முயன்றபொழுது என் சிறகுகளை வெட்டித் தள்ளிவிட்டுத் தெற்கு நோக்கிச் சென்றான். என் பிராணன்கள் தடைபடுகின்றன. கண்கள் சுழலுகின்றன. மரங்களெல்லாம் தங்கம்போன்று மஞ்சளாகத் தோற்றமளிக்கின்றன. ஸீதையை அவன் எடுத்துச் செல்லும் காலம் சரியல்ல. மீன் தூண்டிலில் சிக்கியவாறு அவன் இதில் சிக்கி நாசமடையப்போகின்றான். நீ ஸீதையைப் பற்றி கவலைப்படவேண்டாம். கூடிய சீக்கிரமே அவனைச் சண்டையில் கொன்று ஸீதையுடன் சந்தோஷமாய் இருக்கப் போகிறாய்'' என்று கூறிக் கொண்டிருக்கும் பொழுதே ஜடாயுவின் முகத்திலிருந்து மாமிசத்துண்டுகள் கலந்த இரத்தம் பெருகத்தொடங்கிற்று. அப்பொழுது இராவணன் விச்ரவசின் புத்திரன், குபேரனின் ஸஹோதரன் என்று பேசத்தொடங்கிய பொழுது, இராமன் ''சொல்லு சொல்லு'' எனக் கூறும் பொழுது ஜடாயு பிராணனை விட்டுவிட்டது.

ச்லோகம்—13

संसूच्य वक्ष्य इति नाह कबन्ध एत-
दज्ञानमभ्यनयदत्र च सूर्यसूनुः ।
उक्तं हि तत्र भगवन्ननिमित्तमन्यत्
संकल्प एव भवतश्शिव तस्य दृष्टिः ॥ १३ ॥

ஸம்ஸூச்ய வக்ஷ்ய இதி நாஹ கபந்த ஏதத்
அக்ஞாநமப்யநயதத்ர ச ஸூர்யஸூநு: ।
உக்தம் ஹி தத்ர பகவந்நிமித்தமந்யத்
ஸங்கல்ப ஏவ பவதச்சிவ தஸ்ய த்ருஷ்டி: ॥ 13 ॥

பொழிப்புரை:-இவ்வாறு கபந்தனும் முதலில் இராவணன் இருப்பிடத்தைச் சொல்வதாகக் கூறி கூருமலேயே போய் விட்டதாகக் கூறியிருக்கிருர். அதுபோல் ஸுக்ரீவனும் அதை அறிந்திருந்தும் அறியாதவன் போல் நடித்து விட்டான் எனவும் வர்ணித்துள்ளார்.

விளக்கவுரை: ஆரண்யகாண்டத்தில் ஸ்ரீ ராமன் கபந்தனைச் சந்தித்த பொழுது ஸ்ரீ ராமவசனம்—"பெருமை வாய்ந்த என் மனைவியான ஸீதை இராவணனுல் அபகரிக்கப்பட்டிருக்கிருள் நானும், என் ஸஹோதரனும் அச்சமயம் ஜனஸ்தானத்திலிருந்து வெளியே சென்றிருந்தோம். அவன் பெயர் மட்டும் எங்களுக்குத் தெரியுமேயன்றி உருவமோ, அவன் இருப்பிடமோ, பெருமையோ தெரியாது. யானைகளால் முறித்துத் தள்ளப்பட்ட காய்ந்த கட்டைகளைக் கொண்டுவந்து உன் விருப்பப்படி பெரிய குழி தோண்டி அதில் உன்னை இட்டுக் கொளுத்துகிருேம். ஸீதை எங்கு யாரால் அபகரித்துச் செல்லப்பட்டாள் என்பதை நீ கூறுவாயாக. உண்மை தெரியுமானுல் இந்த நல்ல காரியத்தைச் செய்.

இதற்குக் கபந்தன் சொன்ன பதில் வசனம்:-திவ்ய ஞானம் எனக்கு இல்லை. ஸீதையை நானறியேன். இது விஷயம் யாருக்குத் தெரியும் என்பதை நீங்கள் என்னை எரித்தபின் நான் என் ஸ்வயரூபத்தை அடைந்த பின் தெரிவிக்கிறேன். இப்பொழுது உள்ள நிலையில் எனக்கு அதற்குச் சக்தியில்லை. சாபத்தால் என் அறிவு இப்பொழுது மங்கிவிட்டது. என் வினையால் இந்த நிந்திக்கத்தக்க உருவம் என்னுல் அடையப் பட்டிருக்கிறது. ஸூரியன் மறையும் முன்னரே என்னைக் குழியில் போட்டு முறைப்படி கொளுத்திவிட வேண்டும். பின்னர் நான் அவனை யார் அறிவாருே அவனைப் பற்றிச்

சொல்கிறேன். நீ முறைப்படி அவனோடு தோழமை கொள்ள வேண்டும். அவன் உனக்கு வேண்டிய உதவி செய்வான். மூவுலகத்திலும் அவன் அறியாத விஷயம் இல்லை. அவன் ஒரு காரணத்தால் முன்பு எல்லா உலகங்களையும் சுற்றியிருக்கின்றான்.

பின்னர் இராமனால் கொளுத்தப்பட்டு, சாபம் விலகி ஸ்வரூபத்தை அடைந்து விமானம் ஏறிய கபந்தன் இராமனைப் பார்த்து நான் சொல்வதைக்கேள். ஸுக்ரீவன் என்ற ஒரு வானரம் என்று தொடங்கி அவன் கதையைச் சொல்லி அவன் ஸீதையைத் தேடும் விஷயத்தில் உனக்குத் துணையாகவும் நண்பனாகவும் இருப்பான். வருந்த வேண்டாம். நடப்பது நடந்தே தீரும். காலத்தை வெல்ல யாராலும் முடியாது. ஆகவே நீ சீக்கிரம் அவனை அடைந்து தோழனாக்கிக் கொள் என்பன போன்றவற்றைச் சொல்லி முன் கூறியது போலவே அவனுக்குத் தெரியாத விஷயம் கிடையாது என்றெல்லாம் கூறினான்.

ச்லோகம்—14

ज्ञातेरिपुं रघुपतिः लघुसंजिहीर्षेत्
यःक्रोधतः समजिहीर्षदशेषलोकान् ।
मोघो भवेच्छिवतदा निहते रिपौ ते
संकल्प एव न हतेतु तदीयबाणः ।। १४ ।।

க்ஞாதேரிபும் ரகுபதி: லகுஸஞ்ஜிஹீர்ஷேத்
ய: க்ரோதத: ஸமஜிஹீர்ஷதசேஷ லோகான் ।
மோகோ பவேச்சிவ ததா நிஹதேரிபௌ தே
ஸங்கல்ப ஏவ ந ஹதேது ததீயபாண: ।। 14 ।।

பொழிப்புரை:—இராமன் உடனே அதை அறிந்து கொண்டால் எல்லா உலகத்தையும் அழிக்கும் வல்லமை கொண்ட அவன் இராவணனை அழிக்க முற்படுவான், அவனை அழித்து

விட்டால் தங்களது ஸங்கல்பம் வீணாகிவிடும். அவனை அழிக்காவிட்டால் அவனது பாணம் வீணாகிவிடும்.

விளக்கவுரை:—ஸ்ரீ ராமன் ஸுக்ரீவனைச் சந்தித்த இடத்தில் ஸுக்ரீவனைப் பார்த்து ஸ்ரீராம வசனம்:—எனக்குத் துன்பத்தைக் கொடுத்துள்ள அந்த அரக்கன் எவ்விடம் வசிக்கிருன்? அவனுக்காக நான் எல்லா அரக்கர்களையும் கொல்லப் போகிறேன். ஸீதையை அபகரித்து எனக்குக் கோபத்தை உண்டாக்கித் தன் மரணத்துக்கே அவன் வழி வகுத்துக் கொண்டுவிட்டான்.

இதற்கு ஸுக்ரீவன் ப்ரதிவசனம்:—பாபியான இந்த ராக்ஷஸனுடைய இருப்பிடத்தையோ ஸாமர்த்தியத்தையோ, பராக்கிரமத்தையோ, நீச குலத்தவனுன அவன் வம்சத்தையோ நானறியேன்.

இ வ் வி ட ம் ஜடாயு தான் நீடித்து ஜீவிக்க முடியாதென்பதை உணர்ந்திருந்தும் பேசும் திறமையுள்ளபோதே இராமன் அவசியமாக அறிய விரும்பிய இராவணனின் இருப்பிடத்தைக் கூருமல் வேறு எதையோ கூறிவிட்டு உயிரை விட்டது.

கபந்தனும் அவர் அறியவிரும்பிய அதே விஷயத்தை முன்பு அறிந்திருந்தும் சாபத்தால் என் அறிவு குன்றிவிட்டது எனக்கூறி சாபம் விலகிய பின்னரும் ஸுக்ரீவனைக் காட்டினுனே தவிர, இடத்தைக் கூறவில்லை.

ஸுக்ரீவனும் கபந்தன் போலவே அதை அறிந்திருந்தும் தெரியாதெனவே கூறிவிட்டான். அவன் அறியாமலிருந்தால் கபந்தன் அவனைக்காட்டியிருக்கமாட்டான். ஸீ தை யை த் தேடவேண்டிய இடங்களை ஸுக்ரீவன் குறிப்பிடும் வசனங்களிலிருந்தும் அவனுக்கு அவளிருப்பிடம் தெரிந்திருக்க வேண்டும் என்பதும் தெளிவாகிறது. உத்தர இராமாயணத்திலும் அகஸ்திய இராம ஸம்வாதத்தில் இவ்விஷயம் தெளிவாகக் கூறப்பட்டுள்ளது.

இவ்வாறு மூவரும் இராவணனின் இருப்பிடத்தை அறிந்திருந்தும் அதை இராமனுக்கு அறிவிக்காததற்கு வேறு காரணமிருந்தால் கவியே அதைக் கூறியிருப்பார். ஆனால் கூறவில்லை. ஆகவே ஈச்வர ஸங்கல்பமே இதற்குக் காரணம் என அவர் நினைத்திருக்கிறார் என்பது தெளிவு.

இவர்கள் சொல்லியிருந்தாலும் கடலில் அணைகட்டவும், உதவியாளர்களைத் தேடுவதிலும் காலதாமதம் ஏற்படலாமே எனக் கொள்வதும் சரியாகாது. இவையெல்லாம் உண்மையில் அவருக்குத் தேவையில்லை என்னும் விஷயம் ஜனஸ்தானத்தில் நடந்த ஒரு நிகழ்ச்சியை நினைவுபடுத்திக் கொள்வோமானால் தெளிவாகும். இராமன் அங்கு ஸீதையைத் தேடி அலையும் சமயத்தில் தேவர்கள், கந்தர்வர்கள் போன்றவர்களுள் ஒருவர் கூட இந்த விஷயத்தில் உதவி செய்யவில்லை என்ற கோபத்தில் அவர் இவ்வுலகத்தையே அழிக்க முயன்ற பொழுது தக்க காரணத்துடன் இலக்ஷ்மணன் அவரைச் சமாதானம் செய்தார் என்ற விஷயம் அவ்விடம் கூறப்பட்டுள்ளது. இதிலிருந்து இராவணனைக் கொல்ல அவருக்கு உதவியொன்றும் தேவையில்லை. இடமறிந்தால் உடனேயே அவனைக் கொல்ல முற்படுவார். ஆகவே காலதாமதம் ஏற்பட வேறு ஒரு காரணமுமில்லாததால் பரமேச்வர ஸங்கல்பமொன்றே அதற்குக் காரணமெனக் கொள்வதே பொருத்தமாகும். இராவணனைக் கொல்ல உடனே முயற்சியெடுத்து அவனைக் கொன்று விட்டால் பரமேச்வரனின் ஸங்கல்பம் வீணாகிவிடும். இல்லையேல் ராமபாணம் வீணாகிவிடும். இரண்டும் நிகழாமலிருக்கவே அந்த பரமேச்வர ஸங்கல்பம். ஸ்காந்தம் கேதார கண்டத்திலும் இவ்விஷயம் விளக்கப்பட்டுள்ளது.

ச்லோகம்—15

வேறு காரணத்தாலும் சிவபெருமானே ஸர்வ லோக நியந்தா என்பதே வால்மீகியின் அபிப்ராயம் என இந்த ச்லோகத்தால் கூறுகிறார்.

तत्रोद्यते सकलसंहरणाय भीत्या
सद्यो दशाननवधोऽस्त्वति वांछया च ।
यन्नाहरोपित शरन्तमुपेत्यदेवः
तत्रापि सर्वजगदीश स एव हेतुः ॥ १५ ॥

தத்ரோத்யதெ ஸகலஸம்ஹரணாய பீத்யா
ஸத்யோ தசாநநவதோஸ்த்விதி வாஞ்சயா ச ।
யந்நாஹரோபித சரந்தமுபேத்ய தேவ:
தத்ராபி ஸர்வஜகதீச ஸ ஏவ ஹேது: ॥ 15 ॥

பொழிப்புரை:—மற்றும் ஸ்ரீராமன் ஒரு சமயம் வில்லெடுத்து எல்லா உலகங்களையும் அழிக்க முயன்ற ஸமயத்திலும் கூட பயத்தினாலோ இராவணன் உடனே கொல்லப் படட்டும் என்ற எண்ணத்தினாலோ தேவாதிகளுள் ஒருவர் கூட இராமனுக்கு இராவணனது இருப்பிடத்தை அறிந்தும் சொல்லாததற்கும் தங்களுடைய ஸங்கல்பமே காரணமாகும்.

விளக்கம்:—ஒரு சமயம் இராமன் தேவர்கள் அஸுரர்கள் மனுஷ்யர்கள் வாழும் மூவுலகத்தையும் கோபத்தினால் அழிக்க வெண்ணி அம்பைத் தொடுக்க முயற்சித்தபொழுது யாவருக்கும் பெரிய நடுக்கம் ஏற்பட்டது. இது விஷயம் காட்டில் இராவணனால் அபஹரிக்கப்பட்ட ஸீதையை தர்மமே காக்கவில்லை. யார் எனக்கு உதவப் போகிறார்கள்? இந்த உலகத்தையே படைத்தவனும், சூரனும், கருணையுள்ளம் படைத்தவனும், ம்ருதுஸ்வபாவம் கொண்டவனும், உலகத்தின் நலனையே நாடுபவனும், அடக்கமுள்ளவனுமான என்னை யாவரும் அவமதிப்பதாகவே நான் எண்ணுகிறேன். தேவர்களும் என்னை பலமற்றவனெனவே நினைக்கிறார்கள். இத்தன்மைகள் எல்லாம் என்னிடமிருப்பதால் தோஷம் போலாகி விட்டன. இத்தன்மைகளை மாற்றிக் கொண்டு இப்பொழுதே நான் என் வலிமையைக் காட்டுகிறேன். யக்ஷர்கள், கந்தர்

வர்கள், பிசாசங்கள், அரக்கர்கள், கின்னரர்கள், மனிதர்கள் யாவரும் இனி ஸுகமாக இருக்கமுடியாது. ஆகாசத்தை என் அம்புகளால் இப்பொழுது நிரப்புகிறேன். 'பார், லக்ஷ்மணா! கிரஹங்களைத் தடுக்கிறேன்; வாயு ஸூரியன் முதலானவர்களை இல்லாமல் செய்கிறேன்; மலைகளைப் பிளந்து விடுகிறேன்; நீரை வற்றும்படிச் செய்கிறேன்; காட்டை அழிக்கிறேன்; கடலைத் தூர்த்து விடுகிறேன்' என்று கண் சிவக்கக் கூறி, இராமன் வில்லை நாணேற்றி பாம்புக் கொப்பான ஜ்வலிக்கும் அம்பைத் தொடுத்தார். மூப்பு, இறப்பு, காலம், அத்ருஷ்டம் இவற்றைப் போன்று என்னையும் யாரும் தடுக்க முடியாது என்றும் கூறினார். இந் நிலையிலுங் கூட உலகத்தைக் காப் பாற்ற, நடந்ததையும் இராவணனது இருப்பிடத்தையும் சொல்லி அவரை ஸமாதானப் படுத்த யாரும் முன் வரவில்லை. இராவணனிடமிருந்த பயத்தினால் அப்படி யாரும் வரவில்லை. எனக்கொள்வது இங்கு பொருந்தாது. இராமனிடம் அதை யறிவித்தால் உடனேயே அவர் அவனை அடியோடு அழித்து விடலாமே. பின்னர் ஏற்பட்ட யுத்தத்தில் இந்திரன் இராமனுக் காக மாதலியோடு தன் தேரை அனுப்பவில்லையா? இதெல் லாம் பரமேச்வர ஸங்கல்பத்தினாலேயே நிகழ்ந்துள்ளதெனவே கொள்ளவேண்டுமென்பதே கவியின் நோக்கம் என அறிந்து கொள்ளவேண்டும்.

மஹாபாரதத்தில் ப்ரத்யும்னன் ஸால்வனைக் கொல்ல முயற்சித்த பொழுது கிருஷ்ணனாலேயே ஸால்வன் கொல் லப்படவேண்டும் என்பது ஈச்வர ஸங்கல்பம் எனக் கூறி ப்ரத்யும்னனை அம்முயற்சியிலிருந்து தேவர்கள் தடுத்தார்கள் என்ற விஷயம் கூறப்பட்டிருக்கிறது. அதையொத்தது இவ் விஷயமெனக் கருதவேண்டும்.

ச்லோகம்—16

விச்வாமித்ர வசனத்தாலும் சிவ மஹிமை வெளிப்படுத் தப்பட்டுள்ளது என அடுத்த ச்லோகத்தில் எடுத்துக் காட்டுகிறார்.

गङ्गाशिवेशिरसिते पतनेन पुण्या
पापापनोदन विनोदपटीयसीति ।
देवादयोऽपि वसुधातल वासमाप्ता:
स्नातास्तथेति स वचो निबबन्धचार्षम् ॥१६॥

கங்காசிவேசிரஸிதே பதனேந புண்யா
பாபாபனோதன விநோதபடீயஸீதி ।
தேவாதயோபி வஸுதாதல வாஸமாப்தா:
ஸ்நாதாஸ்த்த தேதி ஸ வசோ நிபபந்தசார்ஷம் ॥ 16 ॥

பொழிப்புரை:—கங்கையும் மங்களகரமான தங்களது சிரஸில் விழுந்த காரணத்தினுலேயே யாவருடைய பாவங்களையும் போக்கக் கூடிய புனிதமான தன்மையடையப் பெற்ருள் என்றும், தேவர்களும் கூட பூமியையடைந்து தங்களைப் புனிதமாக்கிக் கொள்ள கங்கையில் ஸ்நானம் செய்கிருர்கள் என்றும் ஸ்ரீராமனைப் பார்த்து மஹரிஷியான விச்வாமித்திரர் கூறினுர் என்று கூறும் வாயிலாகவும் வால்மீகி தனக்குத் தங்களிடம் உள்ள பக்தியை வெளியிட்டிருக்கிருர்.

விளக்கம்:—பகீரதனின் கடுந்தவத்தால் ஸந்தோஷமுற்ற பிரமன் அவனைப் பார்த்துச் சொல்கிருர். "ஏ அரசனே! பூமியானது கங்கையின் வீழ்ச்சியைத் தாங்காது. சிவபெருமானைத் தவிர அவளது வீழ்ச்சியைத் தாங்கும் வீரன் வேறு இருப்பதாக நான் நினைக்கவில்லை.

மஹாபாரதத்தில் பகீரதனின் தவத்தால் ஸந்தோஷமுற்ற கங்கையினுல் அவனைப்பார்த்து வருமாறு கூறப்பட்டதாகச் சொல்லப்பட்டிருக்கிறது. "நீ வேண்டியபடி நான் பூமியை நோக்கி வருகிறேன். ஆனுல் நான் வரும் வேகத்தைத் தாங்க மூவுலகத்துள்ளும் சிவபிரானைத் தவிர, வேறு யாருமில்லை." ஆகவே அவரை வழிபட வேண்டுமென்றெண்ணிய பகீரதன் அவரை வேண்ட, அவரும் அதற்கு ஒப்புக்

கொள்ள, பாதாளம்வரை நேராகச் சென்றுவிட வேண்டு மென்று அஹங்காரத்துடன் பெருகிவந்த கங்கையைப் பெரிய தான தனது ஜடையினுள் மறைத்துவிட்டார். பின்னர் கருணை யுடன் அவர் கங்கையை வெளிவிட, அந்தநாள் முதல் சிவ பிரானது ஸம்பந்தம் ஏற்பட்டதால் மிகவும் புனிதமான இந்த கங்கையில் தேவர்கள் முதலானயாவரும் நீராடி புனிதத் தன்மையைப் பெற்று வருகிறார்கள், சாபம் பெற்று பூமியில் விழுந்தவர்களும் அதில் நீராடி சாபத்திலிருந்து விடுபடுகிறார் கள் என்று விச்வாமித்திரர் ராமலக்ஷ்மணர்களிடம் கூறுவதாக வால்மீகி கூறியுள்ளார். இதிலிருந்தும் சிவபெருமானே யாவரையும் விட மேலானவர் என்பது தெளிவாக அறியப் படுகிறது.

ச்லோகம்—17

இவ்வாறு பலவிடங்களைக் காட்டிய பிறகு ஓரிடத்தில் பரசுராமனின் வாக்கியப்படி சிவனாரது தாழ்மை தோன்றுவது போலுள்ள இடத்தைக் காட்டி, அப்படியல்ல என்பதை இந்த சுலோகத்தினால் எடுத்துக் கூறுகிறார்.

नारायणस्य धनुषस्तव भीमचापात्
उत्कृष्टतां गणयतः किल भार्गवस्य ।
यन्मेनिरेत्वदधिकं तमितीववाक्यं
तद्बाधितं च वचनेन रघूद्वहस्य ।। १७ ।।

நாராயணஸ்ய தநுஷஸ்தவ பீமசாபாத்
உத்க்ருஷ்டதாம் கணயத: கில பார்கவஸ்ய |
யந்மேநிரேத்வததிகம் தமிதீவ வாக்யம்
தத்பாதிதம் ச வசநேந ரகூத்வஹஸ்ய || 17 ||

பொழிப்புரை:—ஓரிடத்தில் உள்ள பரசுராமரது வசனத்தால் நாராயணருடைய வில்லே தங்களது வில்லைக் காட்டிலும் சிறந்ததென அவர் நினைப்பதிலிருந்து நாராயணரே தங்களைக்

காட்டிலும் பெருமை வாய்ந்தவரென அறியப்படுகிறதே யெனில், அது வேறொரு இடத்திலுள்ள ஸ்ரீராம வசனத்தினு லேயே தவறென்பது தெளிவாய் அறியப்படுவதால் குறை யாகாது.

விளக்கம்:—ஜனக மஹாராஜனது ஸபையில் ஸ்ரீராமன் சிவதனுஸை முறித்து விட்டார் என்ற செய்தியைக் கேட்ட பரசுராமன் க்ஷத்திரியனுடைய மேன்மையைப் பொறுக்காத வராய், ஸ்ரீராமன் அயோத்திக்குத் திரும்பிவரும் பொழுது நடுவழியில் எதிர்ப்பட்டுத் தன் கையிலுள்ள விஷ்ணு தனுஸ் சிவ தனுஸைக் காட்டிலும் மேலானது என்றெண்ணி இராம னைப் பார்த்து, "இதை நாணேற்றி அம்பைத் தோடு, பின்னர் நான் உன்னை வீரனுக எண்ணி உன்னுடன் போர் புரிகிறேன்" என்று சொல்லுமிடத்தில் இவ்வாறு ஒரு கதை சொல்லப்பட்டது.

முன்னொரு ஸமயம் சிவன் பெரியவரா, நாராயணன் பெரியவரா என்றறிய விரும்பிய தேவர்களால் வேண்டப்பட்ட பிரம்மதேவனுல் ஒரு உபாயத்தைக் கையாண்டு அவர்களுள் பகைமை தோற்றுவிக்கப்பட்டது. அப்பொழுது விச்வகர்மா வினுல் நிர்மாணிக்கப்பட்ட இரு வில்களை இருவரும் கையி லேந்தி யுத்தம் செய்யத் தொடங்கினுர்கள். அப்பொழுது நாராயணன் சிவனை ஜயித்துவிட்டார். நாராயணனே சிவனி னும் மேலானவர் என்று அப்பொழுது தேவர்கள் எண்ணினுர் கள். இதிலிருந்து சிவனைவிட நாராயணனே மேலானவர் என்று அறியப்படுகிறதே எனில் நான்காவது ச்லோகத்தின் உரையைக் காணுமிடத்து இது தவறு என்பது தெளிவாகும். அது ஸ்ரீராமவசனம், இது பரசுராமனின் வாக்யம்.

ச்லோகம்—18

பதினேழாவது ச்லோகத்தில் கூறிய விஷயத்தையே இந்த ச்லோகத்தில் மீண்டும் விளக்குகிருர்.

दृप्तस्य कोपकलुषस्य वचः किलाद्यं
धर्मस्य विग्रहवतस्तु वचोद्वितीयम् ।
युद्धे क्वचित्त्वदधिकत्वमरेर्वचश्च
त्वद्दत्तसत्यवरनिर्वहणाययुक्तम् ॥ १८ ॥

த்ருப்தஸ்ய கோபகலுஷஸ்யவச: கிலாத்யம்
தர்மஸ்ய விக்ரஹவதஸ்து வசோத்விதீயம் ।
யுத்தே க்வசித்தவததிகத்வமரேர் வசச்ச
த்வத்தத்தஸத்யவரநிர்வஹணாய யுக்தம் ॥ 18 ॥

பொழிப்புரை—நாராயணன் சிவனைக் காட்டிலும் பெரியவர் எனக்கூறும் வசனம் கர்வமும், கோபமும், குழப்பமும் அடைந்துள்ள பரசுராமனுடையது, சிவனே நாராயணனைக் காட்டிலும் பெருமை வாய்ந்தவர் என்று கூறும் வசனம் தர்மாத்மாவான ஸ்ரீராமனுடையது. ஆகவே ஸ்ரீராமனுடைய வார்த்தையே ஏற்றுக் கொள்ளத் தக்கதென்பது கருத்து. இராவணனைக் கொல்ல சிவனாலும் முடியாது, இராமனால் தான் முடியும் என்ற ஹனுமத் வசனமும் இராவணனைப் பயமுறுத்துவதற்காகச் சொன்னதேயன்றி வேறில்லை. நாராயணனால் சிவன் ஒரு சமயம் யுத்தத்தில் தோற்கடிக்கப்பட்டாரென்ற புராணக் கதையும் நாராயணனுக்கு சிவபெருமான் முன்பு ஒரு சமயம் கொடுத்த வரத்தை மேம்படுத்திக் கூறவே அன்றி வேறில்லை.

விளக்கம்:—சிவ நாராயண யுத்தத்தைக் கூறிய பரசுராமன் மிகவும் கர்வம் படைத்தவரென்பதும் கோபம் மூண்டவர் என்பதும், இனி க்ஷத்திரியர்களைக் கொல்வதில்லை சஸ்த்ரத்தைக் கையிலெடுப்பதில்லை என்ற தனது பிரதிக்ஞையைத் தற்சமயம் மீறியுள்ளார் என்பதும் அறியப்பட்டுள்ளது. லவண சத்துருக்னன் யுத்தம் (ச்லோகம்— 4) பற்றிக் கூறிய இராமனோ தர்மமே உருவெடுத்தவர் என்பதும், ரிஷிக்குச் சமமானவர் என்பதும் வார்த்தை தவருதவர் என்பதும், ஸத்யஸந்தர்

என்பதும் அறியப்பட்டுள்ளது. ஆகவே ஸ்ரீராமன் சொல்வதே சரியென்றும், பரசுராமன் சொல்வது தவறு என்றும் கொள்ள வேண்டும் என்பது தெளிவாகிறது.

மேலும், பிரம்மாவோ, ருத்திரரோ இந்திரனோ இராமனால் கொல்லத்தகுந்த இராவணனைக் காப்பாற்ற முடியாதென ஓரிடத்தில் ஹனுமான் சொல்லியிருப்பதும் இராவணனைப் பயப்படுத்துவதற்கே அன்றி உண்மையானது அல்ல. என்னைத் தவிர மட்டமான ஒரு ப்ருத்யன் ஸுக்ரீவனிடம் இல்லை, ஆகவேதான் நானே இவ்விடம் - அனுப்பப்பட்டிருக்கிறேன் என்று ஸீதையைச் சமாதானப்படுத்துவதற்காக அவளிடம் கூறிய ஹனுமத்வசனம் போன்றதே இது. இந்த அஸ்த்ர பலம் எனக்கோ சிவபிரானுக்கோ தான் உண்டு எனக்கூறும் ஸ்ரீராம வசனம் அத்தகையது அல்ல; உண்மையானதேயாம்:

சிவபெருமான் நாராயணனிடம் தோல்வியுற்றதாகச் சொல்லப்பட்டிருப்பதும் தான் கொடுத்த வரத்தைக் காப்பாற்ற அவ்விதம் நடித்தாரேயன்றி உண்மையல்ல என்பதும் மஹாபாரதத்திலிருந்து அறியப்படுகிறது. எப்படியெனில், மஹாபாரதம் துரோண பருவத்தில்:—

துரோணர் கொல்லப்பட்டபின் கோபமடைந்த அச்வத்தாமனால் அர்ச்சுனனை நோக்கி ஏவப்பட்ட நாராயணாஸ்திரம் கிருஷ்ணனால் வீணாக்கப்பட்டதை உணர்ந்து வெட்கமடைந்த அச்வத்தாமன் சஸ்திரத்தை எறிந்து விட்டுத் தென்திசையை நோக்கிச் சென்றுகொண்டிருந்தபொழுது நடு வழியில் சந்தித்த வியாஸரிடமிருந்து ஒரு வரலாறு கேட்டான். அதாவது முன்னொரு ஸமயம் மைனாக பர்வதத்தில் அறுபதினாயிரம் வருஷங்கள் தவஞ்செய்து தன்னை ஸந்தோஷிக்கச் செய்த நாராயணனுக்குச் சிவபெருமான் பலம், வீர்யம், பராக்ரமம் முதலியவற்றை எங்கும் தடைபடாத முறையில் வரமாக அளித்தார். நம்முள் சண்டை ஏற்பட்டாலும் நீயே ஜயிக்கக் கடவாய் என்பதே அந்த வரமாகும்.

ஹரிவம்ஸத்தில் பாரிஜாதாபஹரணத்தை ஸாதிக்கும் பொருட்டுத் தன்னைப் பூஜித்து நின்ற கிருஷ்ணனுக்கும் சிவபிரானால் இதே வரம் அளிக்கப்பட்டுள்ளதென்றும் கூறப்பட்டுள்ளது. ஆகவே நாராயணனிடம் சிவபிரான் தோல்வியடைந்ததாகக் கூறப்படுவது தான் கொடுத்த வரத்தைத் தழுவியேயன்றி வேறில்லையெனவே கொள்ளவேண்டும். இதனால் சிவபிரானுக்கு அபகர்ஷம் (குறைவு) என்பது ஏற்படவே காரணமில்லை.

ச்லோகம்—19

இவ்வாறு இராமாயணத்தில் எவ்விடத்திலும் சிவபெருமானது மேன்மையே வெளிப்படுத்தப்பட்டிருப்பதாலும், இதற்கு முரண்பாடு ஓரிடத்திலும் இல்லாததாலும் சிவோத்கர்ஷமே (சிவனது மேன்மையே) இராமாயணத்தின் முக்கியமான குறிக்கோள் என்பது இந்த ச்லோகத்தினால் கூறப்படுகிறது.

इत्थं तव श्रुतिशत प्रथितं परत्वं
प्राधान्यतः स्मरहर प्रतिपादनीयम् ।
द्वारं तु रामचरितं कविना गृहीतं
रामायणे महितं उत्तमकाव्यरत्ने ॥ १९ ॥

இத்தம் தவ ச்ருதிசதப்ரதிதம் பரத்வம்
ப்ராதாந்யத: ஸ்மரஹர ப்ரதிபாதநீயம் ।
த்வாரம் து ராமசரிதம் கவிநா க்ருஹீதம்
ராமாயணே மஹிதம் உத்தமகாவ்யரத்னே ॥ 19 ॥

பொழிப்புரை:—இவ்வாறு அனேக சுருதிகளில் பிரஸித்தமான தங்களுடைய பெருமையே இராமாயணத்திலும் முக்கியமாகக் கூறப்பட்டுள்ளது. அதற்கு உபாயமாகவே வால்மீகி ராமாயணத்தில் ஸ்ரீராம சரித்திரத்தை வருணித்துள்ளார். உத்தம காவியமான இராமாயணத்திற்கு இம்முறையே மிகப் பொருத்தமானதாகும்.

விளக்கம்—:உத்தம நாயகனது சரித்திரத்தை அமைத்து அதன்மூலம் வ்யங்க்யமாகும் வகையில் பொருளைத் தன்னுள் கொண்ட காவியமே உத்தம காவியம், த்வனி காவியம் எனப் படும். இராமாயணத்திலும் அவ்வாறே ஸ்ரீராமனது சரித் திரத்தை அமைத்து அதன்மூலம் சிவபிரானுரது பெருமை மறைமுகமாக வெளியிடப்பட்டிருப்பதால் தான் இது உத்தம காவியமாக விளங்குகிறது.

வேத உபப்ரும்மணமான இராமாயணத்தில் சிவபெரு மானுரது பெருமை கூறப்பட வேண்டுமானுல் அது வேதங் களில் கூறப்பட்டிருக்க வேண்டுமேயெனில் அதர்வசிகை போன்ற உபநிஷத்துக்களில் அது கூறப்பட்டிருப்பதைக் காண லாம். மற்றும் இராமாயணம் காயத்ரீ ப்ரதானம் என்பது மிகப் பிரஸித்தம். காயத்ரீ பிரதிபாத்யமான தேவதையும் சிவ பிரானே என்பதும் பிரஸித்தம். ஆதித்யஹ்ருதய ஸ்தோத் திரத்திலும் இது தெளிவாக உள்ளது. ஆகவே இராமாயணம் சிவபரமே என்பதில் ஐயப்பாட்டிற்கே இடமில்லை.

ச்லோகம்—20

உண்மை இவ்வாருக இருப்பினும் சில வீரவைஷ்ண வர்கள் முக்திக்கு முதல் படியான சரணுகதியே இராமாயணத் தின் குறிக்கோள். அதுவே, அதிலும் விபீஷண சரணுகதியே முக்கியமாக விளக்கப்பட்டிருக்கிறது என்று கூறுகிருர்கள். அக்கருத்து தவருனது என்பது இந்த ச்லோகத்தில் விளக்கப் படுகிறது.

केचिद्विभीषणसमाचरितं प्रधानं
कोणे श्रुतं प्रपदनं प्रतिपाद्यमाहुः ।
प्राधान्यमत्र कथमुत्तमनाम्नि काव्ये
वाच्यातिशायिविषयार्थि तदश्नुवीत ॥ २० ॥

கேசித்விபீஷண ஸமாசரிதம் ப்ரதானம்
கோணே ச்ருதம் ப்ரபதனம் ப்ரதிபாத்யமாஹு: ।
ப்ராதான்யமத்ர கதமுத்தமநாம்நி காவ்யே
வாச்யாதிசாயி விஷயார்த்தி ததச்னுவீத ॥ 20 ॥

பொழிப்புரை:—எங்கோ ஓரிடத்தில் கூறப்பட்டுள்ள விபீஷண சரணாகதியே இராமாயணத்தின் முக்கியார்த்தம் எனச் சிலர் கூறுகிறார்கள். அது தவறு. உத்தம காவியத்தில் வ்யங்க்யார்த்தமே முக்கியமாக இருக்கவேண்டும். வாச்யமான விபீஷண சரணாகதி எப்படி முக்யமாக முடியும்?

விளக்கம்:—உத்தமம், மத்யமம், அதமம் எனக் காவியம் மூன்று வகைப்படும். வ்யங்க்யத்தைப் பிரதானமாகக் கொண்டது உத்தமம். வாச்யத்தைப் பிரதானமாகக் கொண்டது மத்தியமம். வ்யங்க்யமே இல்லாதது அதமம். வ்யங்க்யமே காவியத்தின் ஆத்மா போன்றது. சப்தார்த்தங்கள் உடல் போன்றவை என்பது ஸஹ்ருதயர்களின் கொள்கையாகும். இவ்வாறிருக்க வால்மீகி மஹரிஷியால் இயற்றப் பெற்ற இராமாயணம் உத்தமகாவியமெனவே கொள்ளப்பட வேண்டும். அதற்கும் வ்யங்க்யமான சிவமஹிமையே காரணமாகுமேயன்றி வாச்யமான விபீஷண சரணாகதியல்ல.

ச்லோகம்—21

காவிய நயத்தை விடுத்து மேலான தன்மையைக் கருதி விபீஷண சரணாகதியே ராமாயணத்தின் முக்கிய பொருளாகக் கொள்ளப்பட வேண்டுமென்பதும் பொருந்தாது என்பது இந்த ச்லோகத்தினால் விளக்கப்படுகிறது.

स्याच्चत्तदीशफलगौरवतः प्रधानं
इक्ष्वाकुनायक समाचरितं तथास्यात् ।
तच्चापि वायसकृतं धनलाभतोऽपि
दारात्मलाभमधिकं हि बुधा वदन्ति ॥ २१ ॥

ஸ்யாச்சேத்ததீச பலகௌரவதः ப்ரதானம்
இக்ஷ்வாகுநாயக ஸமாசரிதம் ததாஸ்யாத் ।
தச்சாபி வாயஸக்ருதம் தனலாபதோऽபி
தாராத்மலாபமதிகம் ஹி புதா வதந்தி ॥ 21 ॥

பொழிப்புரை:—காவியமென்னும் நோக்கில் அல்லாமல் பயனை நோக்கி விபீஷண சரணாகதிக்குப் பிராதான்யம் கொடுக்கலாமோவெனில், அதுவும் சரியாகாது. இராமாயணத்தில் முக்கியமாக மூன்று சரணாகதிகள் கூறப்பட்டுள்ளன. ராஜ்யத்தை விரும்பி ஸ்ரீராமனிடம் விபீஷணன் செய்த சரணாகதி ஒன்று. தாரத்தை விரும்பி ஸுக்ரீவனிடம் ஸ்ரீராமன் செய்த சரணாகதி ஒன்று. உயிரை விரும்பி ராமனிடம் காகாசுரன் செய்த சரணாகதி ஒன்று. இம் மூன்றுள் முதலாவதைக் காட்டிலும் இரண்டாவதும், இரண்டாவதைக் காட்டிலும் மூன்றாவதுமே சிறந்ததென அறிவாளிகள் கூறுகிறார்கள். ஆகவே அந்த நோக்கிலும் காகாசுர சரணாகதியே இராமாயணத்தில் பிரதானமாகுமேயன்றி விபீஷண சரணாகதியாகாது.

விளக்கம்:—ராஜ்யத்தைப் பெற வேண்டுமென்ற நோக்கத்துடன் விபீஷணன் ஸ்ரீராமனைச் சரணடைந்தான். மனைவியைப் பெற வேண்டும் என்ற எண்ணத்துடன் ஸ்ரீராமன் ஸுக்ரீவனைச் சரணடைந்தார். தன்னுயிரைக் காப்பாற்றிக் கொள்ளும் நோக்குடன் காகவேடம் கொண்ட ஜயந்தன் ஸ்ரீராமனைச் சரணமாக அடைந்தான். இவற்றுள் காகம் செய்த சரணாகதியே மற்றவற்றைவிடச் சிறந்ததாகும். ஆபத்தை விலக்க தனத்தையும், தனத்தால் தாரத்தையும், தனம் தாரம் இவற்றால் தன்னையும் காக்கவேண்டுமென்பது ஆன்றோர் கொள்கையாகும். இதன்படி பார்த்தாலும் காக சரணாகதியே மிகச் சிறந்ததாகும். அதுவே இராமாயணத்தின் பிரதான பொருளாகுமேயன்றி மட்டமான விபீஷண சரணாகதி யாகமாட்டாது.

ச்லோகம்—22

விபீஷண சரணுகதி மோக்ஷத்தையடையும் நோக்கத்துடன் செய்யப்பட்டதேயன்றி ராஜ்யத்தைப் பெறவேண்டுமென்றல்ல, ஆகவே அதுவே மேலானதாகும் என்று கூறுவது சரியாகாது என்பதை இந்த ச்லோகத்திஞல் விளக்குகிருர்.

तच्चेद्विमुक्तिफलकं फलगौरवं स्यात्
राज्येप्सयैव तु कृतं तदिति प्रसिद्धम् ।
श्रीरामचन्द्रपवनात्मजयोश्च सूक्त्या
साक्षाच्च तस्य वचनेन विभीषणस्य ॥ २२ ॥

தச்சேத்விமுக்திபலகம் பலகௌரவம் ஸ்யாத்
ராஜ்யேப்ஸயைவ து க்ருதம் ததிதி ப்ரஸித்தம் ।
ஸ்ரீராமசந்த்ர பவநாத்மஜயோச்ச ஸூக்த்யா
ஸாக்ஷாச்ச தஸ்ய வசநேந விபீஷணஸ்ய ॥ 22 ॥

பொழிப்புரை:—விபீஷண சரணுகதி ராஜ்யத்தையடையும் விருப்பத்திஞலேயேயன்றி மோக்ஷத்தையடைவதற்காக அல்ல என்பதும் ஸ்ரீராம வசனத்தாலும், வாயு புத்திரஞன ஹனுமத் வசனத்தாலும், விபீஷண வசனத்தாலுமே தெளிவாக அறியப்படுகிறது. ஆகவே அந்த நோக்கிலும் அதை ராமாயணத்தில் பிரதானமாகக் கொள்ளமுடியாது.

விளக்கம்:—விபீஷணன் முக்தியை அடையும் நோக்கத்துடன் ஸ்ரீராமனிடம் சரணுகதியடையவில்லை. ராஜ்ய போகத்தையடையும் நோக்கத்துடனேயே செய்தான். இது விஷயம் ஹனுமான் முதலியவர்களுடைய வசனங்களால் அறியப்படுகிறது. விபீஷணன் சரணமடைய வரும் சமயத்தில் இராமனைப் பார்த்து ஹனுமான் வசனம்—இராவணனைக் கொல்லுவதற்காகத் தங்களது முயற்சியையும், இராவணனின் கெட்ட செயலையும் அறிந்து, வாலியைக் கொன்று அவன் தம்பியான ஸுக்

ரீவனுக்கு ராஜ்யத்தைத் தாங்கள் பட்டாபிஷேகம் செய்வித்ததையும் கேள்விப்பட்டு, தானும் அவ்வாறே தங்களிடமிருந்து ராஜ்யத்தைப் பெற்றுவிட வேண்டுமென்ற நோக்கத்துடனேயே அவன் இவ்விடம் வந்திருக்கிருன் என்பதாகும். அப்பொழுது ஸுக்ரீவன் முதலானவர்களைப் பார்த்து ஸ்ரீராம வசனம்—நாம் அவன் வம்சத்தைச் சார்ந்தவர்கள் அல்ல. அவனோ ராஜ்யத்தைப் பெற விரும்புகிறவன். அவன் போன்றவர்கள் அறிவாளிகளாக இருக்கக் கூடும். ஆகவே அவன் சேர்த்துக் கொள்ளத் தக்கவனே என்பது. நாக பாசத்தால் கட்டுண்டவிடத்திலும் ஸ்ரீராம வசனம் நான் பிரதிக்ஞை செய்தபடி என்ருல் விபீஷணன் ராக்ஷஸர்களுக்கு ராஜாவாக ஆக்கப்படவில்லை. ஆகவே என்னை படு பொய் சொன்னவன் என்று எல்லோரும் சொல்லுவார்கள் என்பதாம். அதே சமயத்தில் விபீஷணன் வசனம் எவர்களை நம்பி நான் அரசனுக விரும்பினேனோ அவ்விருவர்களும் இப்பொழுது நாக பாசத்தால் கட்டுண்டு மரணமடையும் தறுவாயிலிருக்கிருர்கள் என்பது. இதிலிருந்து, ஸ்ரீராமனிடம் விபீஷணனுக்கு விஷ்ணுவே இவர் என்ற புத்தியிருந்தது; ஆகவே இவரைச் சரணடைந்தால் கண்டிப்பாய் மோக்ஷத்தைப் பெறலாமென்று எண்ணினனேயன்றி ராஜ்யத்தைப் பெரிதாக அவன் நினைக்கவில்லை எனக் கூறுவதற்கு இடமில்லை. அந்த எண்ணமிருந்தால் முற் கூறியபடி அவன் நினைக்க இடமே இருந்திராது. விஷ்ணுவான இவருக்கு இத்தகைய ஆபத்தே வர முடியாது. சிறிது காலம் இந்த நாக பாசத்திற்குக் கட்டுப்பட்டவர் போல் அபிநயம் செய்கிருரேயன்றி வேறில்லை என்றல்லவா நினைக்க வேண்டும்? அப்படி நினைக்கவில்லையே.

ச்லோகம்—23

விபீஷணன் மோக்ஷத்தைக் கருதாமல் ராஜ்யத்தைக் கருதியே சரணடைந்தான் என்ருல் சரணமடைந்தவுடன், "எல்லா போகத்தையும் நான் விட்டு விட்டேன், எல்லா நண்பர்களையும் விட்டு விட்டேன், எல்லா ஐச்வர்யங்களையும்

விட்டு விட்டேன்" என எப்படிக் கூறினன் என்று எழும் கேள்விக்கு இந்த ச்லோகத்தினுல் விடையளிக்கப்படுகிறது.

लङ्का सुहृद्धन सुखानुभवादि सर्वं
त्यक्तं मयेति तु वचो न ततो विरक्त्या ।
श्रीरामचन्द्रकरुणार्द्र कटाक्षलब्धे
तत्रैव रागपिशुनः खलु वाक्यशेषः ॥ २३ ॥

லங்கா ஸுஹ்ருத்தன ஸுகாநுபவாதி ஸர்வம்
த்யக்தம் மயேதி து வசோ ந ததோ விரக்த்யா ।
ஸ்ரீராமசந்த்ரகருணார்த்ர கடாக்ஷலப்தே
தத்ரைவ ராகபிசுந: கலுவாக்யசேஷ: ॥ 23 ॥

பொழிப்புரை:—இலங்கை நண்பர்கள் ஐச்வர்யம் ஸுகம் எல்லாமே என்னுல் விடப்பட்டுவிட்டன என்று ஓரிடத்தில் விபிஷணன் கூறியிருப்பதும் அவனுக்குள்ள வெறுப்பினுலன்று ஸ்ரீராமனது கருணை கடாக்ஷத்தினுல் அவ்வளவும் தனக்குக் கிடைக்க வேண்டும் என்ற ஆசையினுல் தான் என்பது நன்கு அறியப்படுகிறது.

விளக்கம்:—எனது ராஜ்யம், ஜீவிதம், ஸுகம் எல்லாமே தங்களிடமே உள்ளன என்று அடுத்து வரும் விபீஷண வசனத்திலிருந்தே அவனுக்கு அவற்றிலுள்ள ஆசை வெளிப்படுவதால், அவற்றை எல்லாம் விட்டுவிட்டு மோக்ஷத்திற்காகவே அவன் ஸ்ரீராமனைச் சரணடைந்தான் என்பது பொருந்தாது.

ச்லோகம்—24

விபீஷண வசனத்திற்குப் பின் காணப்படும் ஸ்ரீராமனின் செயலும், ஸ்ரீராமவசனமும் இக்கருத்தையே அறிவிக்கிறதென இந்த ச்லோகத்தினுல் கூறுகிருர்.

ज्ञात्वातदीप्सितमतोऽथ रघुप्रवीरः
तेनैव रावणबलादि च वाचयित्वा ।
कृत्वा च रावणतदिष्टवध प्रतिज्ञां
राज्याधिपत्यमददां अभिषेकपूर्वम् ॥ २४ ॥

க்ஞாத்வாததீப்ஸிதமதோऽத ரகுப்ரவீர :
தேனைவ ராவணபலாதி ச வாசயித்வா ।
க்ருத்வா ச ராவணததிஷ்டவத ப்ரதிக்ஞாம்
ராஜ்யாதிபத்யமததாம் அபிஷேக பூர்வம் ॥ 24 ॥

பொழிப்புரை:—விபீஷணனுடைய உட்கருத்தை நன்கறிந்தே ஸ்ரீராமன் அவனைக் கொண்டே ராக்ஷஸனான இராவணனின் பலா பலத்தைக் கேட்டறிந்து அவன் விரும்பியபடியே ராவணவதத்தையும் பிரதிக்ஞை செய்து, பட்டாபிஷேகத்தையும் செய்வித்து லங்கா ராஜ்யத்தின் ஆதிபத்தியத்தையும் கொடுத்து விட்டாரென்பதும் கூறப்பட்டுள்ளது.

விளக்கம்:—விபீஷணனின் வசனத்தைக் கேட்டவுடன் ஸ்ரீராமன் செயல் மூலமே அதைச் செய்து காட்டி விடுகிறேன் என்று எண்ணி அப்பொழுதே அவனுக்குப் பட்டாபிஷேகம் செய்வித்து லங்காதிபத்தியத்தையும் கொடுத்துவிட்டார். இராவணனது லங்காதிபத்தியத்தை அவனிருக்கும் பொழுதே இவனுக்கு எப்படி கொடுக்க முடியும் என்ற ஸந்தேஹம் தேவையில்லை என்பதைப் பந்து வர்க்கத்துடன் இராவணனை யுத்தத்தில் கொல்லாமல் அயோத்தியுள் நுழைய மாட்டேன், என் மூன்று தம்பிகள் மேல் ஆணை என்று இராமன் செய்துள்ள பிரதிக்ஞையிலிருந்து அறிந்து கொள்ளலாம், இராவணனது பலத்தையறியாமல் எப்படிப் பிரதிக்ஞை செய்யலாமெனவும் ஸந்தேஹிக்க வேண்டாம். பிரதிக்ஞை செய்யும் முன்பே விபீஷணன் மூலம் எல்லா விஷயங்களையும் ஸ்ரீராமன் கேட்டறிந்து கொண்டான் என்பதும் கூறப்பட்டுள்ளது. ஆகவே விபீஷண சரணாகதி மோக்ஷத்திற்காகவே என்பதும் அதனால் அதுவே இராமாயணத்தின் ஸாரார்த்தம் எனக் கொள்வதும்

சரியாகாது. சிவபாரம்யமே முன் கூறிய வகையில் இராமாயணத்தின் ஸாரார்த்தம் எனக் கொள்வதே முறையாகும். ரஸ பாவாதி த்வனிகளும் ஆங்காங்கே காணப்பட்டாலும் சிவ மஹிமை என்னும் வஸ்து த்வனி ராமாயணம் முழுமையும் காணப்படுகிறது.

ச்லோகம்—25

இந்தச் சுலோகம் இந்த நூலின் முடிவில் நமஸ்கார ரூபமான மங்களமாக அமைந்துள்ளது,

प्राचेतसाय कवये प्रथमाय तस्मै
तत्काव्यहारतरळाय च राघवाय ।
विश्वात्मने तदुभयस्थिर भावलक्ष्य
मुख्यास्पदाय विभवे च नमश्शिवाय ।। २५ ।।

ப்ராசேதஸாய கவயே ப்ரதமாய தஸ்மை
தத்காவ்யஹாரதரளாய ச ராகவாய ।
விச்வாத்மநே தது‌பயஸ்திர பாவலக்ஷ்ய
முக்யாஸ்பதாய விபவே ச நமச்சிவாய ।। 25 ।।

பொழிப்புரை:—ஆதிகவியான வருண புத்திரரான வால்மீகிக்கும், அவரது காவியமான ராமாயணத்தின் ஹாரம் போன்றுள்ள ராகவனுக்கும் அவ்விருவருடைய மனோபாவத்திற்கும் குறிக்கோளாக உள்ளவரும் எல்லா உலக வடிவிலுள்ளவரும் எங்கும் நிறைந்தவராக உள்ளவருமான ஸ்ரீபரமேச்வரனுக்கும் நமஸ்காரம்.

இவ்வாறு ஸ்ரீமத் பாரத்வாஜ குலம் என்னும் ஸமுத்திரத்தில் தோன்றிய கௌஸ்துபமணியும், அத்வைத வித்யாசார்யரும். விச்வஜித்யாகம் செய்த ஸ்ரீரங்கராஜாத்வரியின் குமாரருமான

ஸ்ரீமத் அப்பய்ய தீக்ஷிதேந்திரர் இயற்றிய
ஸ்ரீராமாயண தாத்பர்ய ஸங்க்ரஹ ஸ்தோத்ரம்
தமிழ் உரையுடன் முற்றிற்று

உ

சிவமயம்

ஸ்ரீ மஹாதேவ ஜெயம்

# ஸ்ரீ பாரத தாத்பர்ய ஸங்க்ரஹ ஸ்தோத்ரம்*

# ॥ श्री भारत तात्पर्य सङ्ग्रहस्तोत्रम् ॥

(ஸ்ரீமத் அப்பய்ய தீக்ஷிதேந்திரர் அருளியது)

தமிழ் விளக்கம்:

பாஷ்யபாவக்ஞ வரஹூர் கல்யாணஸுந்தர சாஸ்திரிகள்

அவதாரிகை:-மஹாபாரதம் சிவபாரம்யத்தையே நோக்கமாகக்கொண்டது என்னும் விஷயத்தை எடுத்துக்காட்டுவதற்காகச் செய்யப்பட்ட இந்த க்ரந்தத்தின் முதல் ச்லோகம் இது.

ச்லோகம்—1

श्रीबादरायणमुनिः स्वयमेवविष्णुः
पार्थच्छलात्तमधिकृत्य कृते प्रबन्धे ।
तस्यापि नित्यमहितं शशिभूषणत्वां
आम्रेडयन् गुरुरदर्शयदादि तत्त्वम् ॥ १ ॥

ஸ்ரீபாதராயணமுநி: ஸ்வயமேவவிஷ்ணு:
பார்த்தச்சலாத்தமதிக்ருத்ய க்ருதே ப்ரபந்தே ।
தஸ்யாபி நித்யமஹிதம் சசிபூஷணத்வாம்
ஆம்ரேடயன் குருரதர்சயதாதி தத்வம் ॥ 1 ॥

*இது ஸ்ரீபாரத ஸார ஸங்க்ரஹ ஸ்தோத்ரம் என்றும் வழங்கப்படுகிறது.

பொழிப்புரை:—சந்திரனைச் சிரோபூஷணமாகக் கொண்ட பரமேச்வரா! குருவும், விஷ்ணுவின் பல அவதாரங்களுள் ஒருவருமான பாதராயணர் என்னும் முனிவர் பாண்டவர்களைப் பற்றித் தானெழுதிய மஹாபாரதம் என்னும் நூலில் அவருக்கு எப்பொழுதும் பூஜிக்கத்தக்க தங்களையே பலவிடங்களில் குறிப்பிடும் வாயிலாக அகில உலகத்திற்கும் தாங்களே ஆதிகாரணம் என்று உலகத்திற்கு எடுத்துக் காட்டியிருக்கிறார். (பாதராயணர் என்பது வியாஸ முனிவரின் மற்றொரு பெயர்).

விளக்கம்:-பாண்டவர்கள், துர்யோதனாதிகள் இவர்களின் சரித்திரத்தை மட்டும் கூறுவதற்காக மஹாபாரதம் எழுதப்படவில்லை. அந்த சரித்திரத்தின் ஸூத்ரதாரியாகவுள்ள ஸ்ரீ கிருஷ்ணனின் சரிதமே மிக முக்யமானது. இது பற்றியே ஸூதமுனிவரும் தொடக்கத்தில் எந்த வியாஸ முனிவருடைய அனுக்ரஹத்தால் நாராயணகதையான இந்த மஹாபாரதத்தை நான் சொல்லப்போகிறேனோ அந்த வியாஸ முனிவரை நான் வணங்குகிறேன் என்று கூறியிருக்கிறார். அத்தகைய ஸ்ரீகிருஷ்ண சரிதத்தை வர்ணிக்கும் வாயிலாக அந்த கிருஷ்ணனே அந்த அவதாரத்திலும் பரவாஸுதேவனாக இருந்த நிலையிலும் பல ஸந்தர்ப்பங்களில் பரமேச்வரனையே ஆராதித்தார் என்று கூறும் முறையில் பரமேச்வரனே பரதத்வம் என்னும் விஷயத்தைச் சிஷ்யர்களுக்கு எடுத்துக் காட்டியிருக்கிறார்.

கிருஷ்ணாவதாரம் போன்ற சில அவதாரங்களில் விஷ்ணு சிவபெருமானைப் பூஜித்தார் என்னும் விஷயம் மஹாபாரதத்தில் ஸௌப்திக பர்வாவிலும், ஆதிபர்வம் ஸுபத்ராபரிணய ப்ரஸ்தாவத்திலும், ஆனுசாஸனிக பர்வாவில் பாசுபதவிரதானுஷ்டானத்தை வர்ணிக்குமிடத்திலும், துரோணபர்வாவில் அச்வத்தாம வியாஸ ஸம்வாதத்திலும் தெளிவாக அறியப்படுகிறது. பாரதசேஷமான ஹரிவம்சத்திலும் பாரிஜாத ஸம்ஹிதை, கைலாஸயாத்திரை போன்ற பலவிடங்களிலும் இவ்விஷயம் அறியப்படுகிறது.

பரவாஸுதேவன் என்ற நிலையிலும் விஷ்ணுவானவர் சிவபிரானைப் பூஜித்துப் பயன் அடைந்தார் என்ற விஷயமும் ஆரண்ய பர்வாவில் தீர்த்தயாத்ராவிதானத்தில் விரிவாக அறியப்படுகிறது. ஆனுசாஸனிக பர்வாவில் உபமன்யு மஹரிஷியின் வசனங்களாலும் இவ்விஷயம் அறியப்படுகிறது. உத்தம மஹாகாவியமான மஹாபாரதத்தில் நேரிடையாக விஷ்ணுவின் பெருமை வர்ணிக்கப்பட்டு இருப்பினும் அத்தகைய பெருமை வாய்ந்த விஷ்ணுவே பரமேச்வரனை ஆராதித்துப் பல பயன்களை அடைந்தார் என்று கூறும் வாயிலாக மஹேசனே யாவருக்கும் மேலான தத்வம் என்னும் விஷயமே மிக முக்யமாக வ்யஞ்ஜனை என்ற வியாபாரத்தால் அறிவிக்கப்பட்டிருக்கிறது என்று உணர வேண்டுமென்பது கருத்து.

ச்லோகம்—2-3

சிவபெருமானே பரதத்வம் என்னும் விஷயமே மஹாபாரதத்தில் அறியப்படுகிறது என்பதை வேறொரு முறையிலும் எடுத்துக்காட்டுகிறார்.

मोहाभिभूतमखिलं जगदाविरिञ्चं
त्वामेकमेवं भगवन् रहितं च तेन ।
विख्याप्यमंकणक दिव्यकथानुषक्त्या
त्वां ब्रह्मतेन च मुनिः स्फुटयांबभूव ॥ २ ॥

மோஹாபிபூதமகிலம் ஜகதாவிரிஞ்சம்
த்வாமேகமேவ பகவந் ரஹிதம் ச தேந ।
விக்யாப்ய மங்கணக திவ்யகதானுஷக்த்யா
த்வாம் ப்ரஹ்மதேந ச முநி: ஸ்புடயாம்பபூவ ॥ 2 ॥

तस्माच्च मोहतदभावकृताद्विशेषात्
जन्मस्थिति प्रलय भागखिलं त्वदन्यत् ।
तत्कर्तृवस्तु परमं त्वमिति प्रबोधं
जातं विभावयति तस्य तदीय वाचा ॥ ३ ॥

தஸ்மாச்ச மோஹதபாவக்ருதாத்விசேஷாத்
ஜன்மஸ்திதி ப்ரலய பாககிலம் த்வதன்யத் I
தத்கர்த்ருவஸ்து பரமம் த்வமிதி ப்ரபோதம்
ஜாதம் விப்ாவயதி தஸ்ய ததீய வாசா II 3 II

பொழிப்புரை:—ஹே பகவானே! வியாஸ முனிவர் பாரதத்தில் மங்கணகர் என்னும் ஒரு ஸித்தரின் திவ்ய சரிதத்தை வர்ணிக்குமிடத்தில் அவரிடம் காணப்பட்ட ஒரு ஆச்சரியமான நிகழ்ச்சியைக் கண்டு பிரம்மதேவன் உள்ளிட்ட எல்லா உலகமுமே மோஹத்தையடைந்தது. தாங்கள் ஒருவரே அவ்வாறு மோஹத்தையடையவில்லை என்று கூறும் வாயிலாகத் தாங்கள் ஒருவரே பரபிரம்மம் என்பதை வெளிப்படுத்தியிருக்கிறார்.

விளக்கம்:—ஆரண்யபர்வாவில் தீர்த்தயாத்ராவிதானத்தில் ஏழாவது ஸாரஸ்வத தீர்த்த ப்ரஸங்கத்தில் 'யத்ர மங்கணக: ஸித்த:' என்று தொடங்கி ஒரு தர்பத்தால் காயமுற்ற அவரது கையிலிருந்து சாகரஸம் பெருக்கெடுத்தது என்று கூறி இவ்விஷயம் சொல்லப்பட்டுள்ளது.

அந்த மங்கணர் அவ்வாறு பெருக்கெடுத்திருக்கும் ரஸத்தைப் பார்த்து ஸந்தோஷத்தினால் நர்த்தனம் செய்ய, அதைப் பார்த்து உலகமே விடாது நர்த்தனம் செய்ய, அதைக் கண்டு கலக்கமுற்ற ப்ரம்மா முதலான தேவர்களும் ரிஷிகளும் மஹேச்வரனை அடைந்து அதை நிறுத்தும்படி வேண்ட, மஹேசன் அந்த சித்தரைப் பார்த்து அதன் காரணத்தைக் கேட்க, அவர் நடந்ததைச் சொல்ல, நான் ஒரு ஆச்சரியம் காட்டுகிறேன் பார் என்று சொல்லி மஹேசன் தன் கட்டை விரலால் மற்றொரு விரலைத் தட்ட அதிலிருந்து வெண்மையான விபூதி பெருக்கெடுத்துக் கொட்ட, அதைக் கண்டு வெட்கித்து ஸித்தர் மஹேசனின் காலில் விழுந்தார். நர்த்தனத்தையும் நிறுத்திவிட்டார். இதிலிருந்து மோஹத்தையடைந்த யாவரும் ஜீவர்களே, மஹேசனே பிரம்மம் என்று நினைத்தார் எனத் தெரிகிறது.

மேலும் மங்கணர் பரமசிவனின் காலில் விழுந்து பின்னர் 'நாத்யம் தேவமஹம்மன்யே' என்று தொடங்கி செய்துள்ள மஹேச ஸ்தோத்ரத்திலிருந்தும் இவ்விஷயம் தெளிவாக அறியப்படுகிறது.

ச்லோகம்—4

ஓரிடத்திலுள்ள கிருஷ்ண சரிதத்திலுைம் இவ்விஷயம் அறியப்படுகிறது என்பதை வெளிப்படுத்துகிருர்.

कैलासशैलशिखरे हरिपार्थदृष्टं
त्वां ब्रह्मनाथ परमं समुदीर्य साक्षात् ।
तल्लक्षणं त्वयमनन्यतदीय धर्मं
क्रान्ते कियच्च भवति स्फुटमाचचक्षे ।। ४ ।।

கைலாஸசைலசிகரே ஹரிபார்த்தத்ருஷ்டம்
த்வாம் ப்ரஹ்மநாத பரமம் ஸமுதீர்ய ஸாக்ஷாத் ।
தல்லக்ஷணம் த்வயமநன்யததீய தர்ம
க்ராந்தே கியச்ச பவதி ஸ்புடமாசசக்ஷே ।। 4 ।।

பொழிப்புரை:-உலக நாயகனை சிவபெருமானே! கைலாய மலையின் சிகரத்திலுள்ள தங்களை கிருஷ்ணனும் அர்ஜுனனும் தரிசிக்க வந்த சமயம் வேதங்களில் சொல்லப்பட்ட பிரம்ம லக்ஷணங்களைக் குறிக்கும் ஸ்தோத்திரத்தினல் தங்களைத் துதி செய்யும் வாயிலாகக் கவி தங்களையே பரப்ரம்மம் என நினைக்கிருர் என்பது நன்கு அறியப்படுகிறது.

விளக்கம்:—கிருஷ்ணனும் அர்ஜுனனும் பாசுபதாஸ்த்ர பிரயோகம் செய்யும் வழிமுறைகளை சிவபெருமானிடமிருந்து அறிந்து கொள்வதற்காக ஒரு சமயம் கைலாயமலையை யடைந்த போது, அவர்கள் வாழ்த்தி வணங்கிய சிவஸ்வரூ பத்தைக் கவி வருணிக்கிருர். அந்த வர்ணனைகளில் சிவபெரு மானுக்குக் கொடுக்கப்பட்டுள்ள அடைமொழிகள் அனைத்தும்

பரமசிவனே பரபிரம்மம் என்பதை வெளிப்படுத்துபவைகளாய் உள்ளன. ஆகவே பரமசிவனே யாவரினும் மேலானவர் என்பது பாரதத்தில் அறியப்படுகின்றது என்பது வெளிப் படை.

ச்லோகம்—5

மற்ருேரிடத்திலுள்ள கிருஷ்ண சரிதத்திலும் இவ் விஷயம் அறியப்படுகிறது என்பதை அடுத்து வரும் ச்லோகத் தினல் வெளிப்படுத்துகிருர்.

नारायणस्य सुचिरं त्वदुपासकस्य
यत्ब्रह्मभावमवदत्तव भावनाप्तम् ।
यत्ते स्तुतिं तदुदितां परभावगर्भां
त्वां ब्रह्म तेन च मुनिः स्फुटयांचकार ॥ ५ ॥

நாராயணஸ்ய ஸுசிரம் த்வதுபாஸகஸ்ய
யத்ப்ரஹ்மபாவமவதத்தவ பாவனுப்தம் ।
யத்தே ஸ்துதிம் ததுதிதாம் பரபாவகர்ப்பாம்
த்வாம் ப்ரஹ்ம தேந ச முநி: ஸ்புடயாம்சகார ॥ 5 ॥

பொழிப்புரை:—ஹே சிவபெருமானே ! வெகு நாள் தங்களையே உபாசித்த நாராயணனைப் பரபிரம்மம் எனக் கவி ஓரிடத்தில் கூறியிருப்பதும், தங்களை அவர் உபாசித்ததின் பயனேயாகும். தாங்களே பரபிரம்மம் எனப் பொருள் படும்படி நாராயணனே தங்களைத் துதி பண்ணியதாக கவி வருணித்திருப்பதிலிருந்தும் வியாசர் தங்களையே பரபிரம்மமென பாரதத்தில் விளக்கியிருக்கிருர்.

விளக்கம்:—துரோண பர்வாவில் நாராயணர் மைனுக பர்வத்தில் பல வருடங்கள் கடுமையாகத் தவம் செய்த வரலாறு கூறப்பட்டுள்ளது. அவ்விடத்தில் அவர் அத்தவத்தின் பயனுக பிரம்மபூதராக ஆய்விட்டார் என்றும் சொல்லப்

பட்டுள்ளது. அதாவது பரபிரம்மமான மஹேசனைக் குறித்து அவர் தவம் செய்து, அவரையே த்யானம் செய்த தன்மையினால் 'தத்க்ரது ந்யாயத்தை' தழுவியே அவர் பிரம்மமானார் என்றே கூறவேண்டும். ஏனெனில் அத்தன்மையையடைய வேறு உபாயம் கிடையாது.

மேல் வரும் விஷயத்திலிருந்தும் இது அறியப்படுகிறது. அதாவது நாராயணனின் தவத்தினால் மகிழ்ச்சியடைந்த பரம சிவன் அவர் முன் தோன்ற, அவரை நாராயணன் பரபிரம்மமெனப் பொருள்படப் பணிவுடன் பலவாருகத் துதித்தார் எனக் கவியால் வர்ணிக்கப்பெற்றுள்ளது. லோகபிதாவான மஹேசனே! தாங்கள் தங்களுடைய பக்தனான என்னைக் காப்பாற்ற வேண்டுமென நாராயணனே கூறுவதாகவும் சொல்லப்பட்டுள்ளது. இவையெல்லாம் யாவரினும் மஹேசனே மேலானவர் என்பதைத் தெளிவாக்குகிறது.

ச்லோகம்—6

மற்றோரிடத்தில் சிவபெருமானைக் குறிப்பிடக் கவி பிரம்மசப்தத்தைத் தனிப்பட உபயோகித்திருப்பதிலிருந்தும் இவ்விஷயம் வெளிப்படுகிறது.

मूलं कृष्णो ब्रह्म च ब्राह्मणाश्चेत्
यादावेवं ब्रह्मभावं महेश ।
पार्थानां ते नित्यसंरक्षकस्य
व्यासस्तत्रोद्घाटयामास शम्भो ॥ ६ ॥

மூலம் க்ருஷ்ணோ ப்ரஹ்ம ச ப்ராஹ்மணாச்சேத்
யாதாவேவம் ப்ரஹ்மபாவம் மஹேச ।
பார்த்தாநாம் தே நித்யஸம்ரக்ஷகஸ்ய
வ்யாஸஸ்தத்ரோத்தாடயாமாஸ சம்போ ॥ 6 ॥

பொழிப்புரை:—ஹே சிவபெருமானே! 'மூலம் க்ருஷ்ணோ ப்ரும்ம ச ப்ராம்ஹணச்ச' என்னுமிடத்தில் பாண்டவர்களுக்கு நித்ய ஸம்ரக்ஷகரான தங்களையே பிரம்மம் என்று கூறி, வியாசர் தாங்களே பிரம்மம் என்னும் தனது அபிப்ராயத்தை வெளியிட்டிருக்கிறார்.

விளக்கம்:—பாரதத்தின் தொடக்கத்தில் யுதிஷ்டிரரை தர்மமயமான ஓர் விருக்ஷமென்றும், அர்ஜுனன் அதன் அடி மரம் என்றும், பீமன் அதன் கிளையென்றும் நகுல ஸஹா தேவர்கள் அதன் புஷ்பங்கள் பழங்களென்றும் கூறி, கிருஷ்ணன் - பிரம்மம் - ப்ராம்மணர்கள் அதற்கு மூலம் அதாவது அதைக் காப்பாற்றுகிறவர்கள் எனக்கூறப்பட்டுள்ளது. கிருஷ்ணன் பலதுறைகளிலும், பிராம்மணர்கள் ஆசீர்வசனங்களாலும் அதைக் காப்பாற்றினார்கள் என்பது யாவராலும் அறியப்பட்டதே. அங்குள்ள பிரம்மபதம் பரமேச்வரனையே குறிக்கின்றது என ஒப்புக்கொள்ள வேண்டும். பரமேச்வரனே மற்றவர்களைக் காட்டிலும் அதிகமாக அதைக் காப்பாற்றினார் என்பது பாரதத்தில் பல இடங்களில் அதாவது ஆரண்ய பர்வத்தில் கிராதார்ஜுனீயத்திலும் துரோணபர்வாவில் கைலாச கமனத்திலும் சதருத்ரீயத்திலும் மற்றும் ஸௌப்தீகம் சாந்தி அச்வமேத பர்வங்களிலும் அறியப்படுகின்றதென்பதும் பிரம்மதர்க்கஸ்தவ விவரணத்தில் எடுத்துக் காட்டப் பட்டுள்ளது. இக்காரணங்களினாலேயே இங்குள்ள பிரம்ம சப்தம் சிவபெருமானையே குறிக்குமே அன்றி அசேதனமான வேதத்தைக் குறிக்காது. கிருஷ்ணருக்கு அடைமொழியாகவும் ஆகாது. மஹோபகாரம் செய்த சிவபிரானை இவ்விடம் குறிப்பிடாமல் இருக்கவும் முடியாது.

ச்லோகம்:—7

சிவபெருமானே பிரும்மா விஷ்ணு முதலானவர்களின் பிரளயத்திற்கும் காரணம் எனக் கூறப்பட்டிருப்பதிலிருந்தும் சிவபிரானே பரபிரம்மம் என்பது அறியப்படுகிறதென அடுத்த ச்லோகத்தில் எடுத்துக் காட்டுகிறார்.

ब्रह्मा विष्णुश्शंकरश्चेति देवाः
कर्तारो ये सर्गरक्षालयानाम् ।
तेषां सृष्टिं संहृतिं च त्वदीच्छा
धीनामूचे द्योतयन् ब्रह्मतत्त्वम् ॥ ७ ॥

ப்ரஹ்மா விஷ்ணுச்சங்கரச்சேதி தேவா:
கர்தாரோ யே ஸர்கரக்ஷாலயாநாம் ।
தேஷாம் ஸ்ருஷ்டிம் ஸம்ஹ்ருதிம் ச த்வதீச்சா
தீநாமூசே த்யோதயந் ப்ரஹ்மதத்த்வம் ॥ 7 ॥

பொழிப்புரை:—உலகத்தைப் படைத்துக் காத்து அழிக்கும் பிரம்ம விஷ்ணு ருத்ரர்களையும் இச்சாமாத்திரத்தினால் தாங்கள் படைக்கிறீர்கள் காப்பாற்றுகிறீர்கள் அழிக்கிறீர்கள் என்று கூறும் வாயிலாகத் தாங்கள் பரபிரம்மம் என்பதைக் கவி வெளிப்படுத்தியிருக்கிறார்.

விளக்கம்:—ஆனுசாஸனிக பர்வாவில் பரமேச்வரனே தக்ஷிணாங்கத்திலிருந்து பிரம்மாவையும் வாம பார்ச்வத்திலிருந்து விஷ்ணுவையும் யுகாந்தத்தில் ருத்ரனையும் படைத்தாரென்பது கூறப்பட்டுள்ளது. சாந்தி பர்வாவில் அவர்களை அவ்வப்பொழுது காப்பாற்றினாரென்பது கூறப்பட்டுள்ளது. இம்மூவரும் எந்த பரமேச்வரனைத் துதிக்கிறார்களோ அந்த பரமேச்வரனைப் பூஜிப்பவர்கள் எல்லாத் துன்பங்களிலிருந்தும் விடுபடுகிறார்கள் என்பதும் சொல்லப்பட்டுள்ளது இவ்வாறே அம்மூவர்களையும் அவர் ஸம்ஹாரம் செய்கிறார் என்பதும் கூறப்பட்டுள்ளது. அப்பொழுது பரமேச்வரன் ஒருவரே மிஞ்சியிருக்கிறார் என்பதும் சொல்லப்பட்டிருக்கிறது. இவ்வாறு 'யதோ வா இமாநி பூதாநி' என உபநிஷத்தில் கூறப்பட்டுள்ள பிரம்மலக்ஷணம் இவரிடமே பொருந்தியுள்ளதாகக் கூறப்பட்டுள்ளதால், இவரே யாவரையும் காட்டிலும் மேலானவரென கவி நினைக்கிறார் என்பது நன்கு அறியப்படுகிறது.

ச்லோகம்—8

பாரதத்திலேயே சிற்சில இடங்களில் பரமேச்வரன் பிரம்மா விஷ்ணு இவர்களைக் காட்டிலும் தாழ்ந்தவர் என்னும் கருத்தும் அறியப்படுகிறதே எனில் அதற்கு அடுத்துவரும் ச்லோகத்தில் விடைகூறுகிறார்.

विशालाक्षस्थाणुर्द्रुहिणतनयः संहरणकृत्
सरोजाक्षक्रोधप्रभव इति वैशेषिकपदम् ।
विभूतित्वज्ञप्त्यै किमपिनिहितन्नाथ नियतं
निकर्षोक्तिस्ताभ्यां भवतइतिबुद्धिं निरसितुम् ॥

விசாலாக்ஷஸ்தாணுர்த்ருஹிணதநய: ஸம்ஹரணக்ருத்
ஸரோஜாக்ஷக்ரோதப்ரபவ இதி வைசேஷிகபதம் ।
விபூதித்வக்ஞப்த்யை கிமபிநிஹிதந்நாத நியதம்
நிகர்ஷோக்திஸ்தாப்யாம் பவத இதி புத்திம் நிரஸிதும் ॥ 8 ॥

பொழிப்புரை:—லோக நாயகனே! பிரம்மா விஷ்ணு இவர்களைக் காட்டிலும் தாங்கள் தாழ்ந்தவரென்ற சிலரது எண்ணத்தை மாற்றுவதற்காகவே தங்களது விபூதிகளான ருத்ரர்களையே ஆங்காங்கு விசாலாக்ஷர், ஸ்தாணு, த்ருஹிண தனயர், ஸம்ஹரணக்ருதர், ஸரோஜாக்ஷர், க்ரோதப்ரபவர் என்ற பெயர்களில் கவி குறிப்பிடுகிறாரே அன்றித் தங்களை யல்ல; இதுவே நிச்சயம்.

விளக்கம்:—இவ்விஷயம் வேறு பல புராண வசனங்களைக் கொண்டும் பாரதத்திலேயே ஆங்காங்குள்ள ஸந்தர்ப்ப சூழ்நிலைகளைக் கொண்டும் விரிவாக விசாரித்து உரையில் நிலை நாட்டப்பட்டுள்ளது. ஆகவே மும்மூர்த்திகளுக்கும் காரணமான பரமேச்வரனுக்கு யாதொருவிதமான தாழ்வுமில்லையென அறிந்து கொள்ள வேண்டும்.

ச்லோகம்—9

பஞ்சேந்திர உபாக்யானத்தில் அஸுராவதாரர்களான துரியோதனாதியரைக் கொல்வதற்காக பஞ்சேந்திரர்களை மனுஷ்ய லோகத்தில் அவதரிக்கும்படி தூண்டுதல் செய்த சிவபெருமான் அவர்களுக்கு உதவி செய்யும் வகையில் நாராயணரும் அங்கு அவதரிக்கட்டும் என்று கூறியிருக்கிறார். இவ்விஷயத்தில் அவர் நாராயணரின் உதவியை நாடுகின்றாரே எனில் நாராயணரை அவர் நாடவில்லை அவரையும் தூண்டுகிறாரெனவே கொள்ள வேண்டுமென அடுத்து வரும் ச்லோகதில் கூறுகிறார்.

यत्रेदृशं नास्ति विभूति रुद्रता
विज्ञापकं नाथ विशेषकं पदम् ।
साऽपि स्वधर्म गृहमानवेशसात्
सर्वेश्वरं त्वां ननिकर्षगोस्पृशेत् ।। ९ ।।

யத்ரேத்ருசம் நாஸ்தி விபூதி ருத்ரா
விக்ஞாபகம் நாத: விசேஷகம் பதம் |
ஸாऽபி ஸ்வதர்ம க்ருஹமானவைசஸாத்
ஸர்வேச்வரம் த்வாம் நநிகர்ஷகீஸ்ப்ருசேத் || 9 ||

பொழிப்புரை:—சிவாம்சமான ருத்ரர்களைக் குறிக்காதவிடத்தில் முன்கூறியபடி குறையாக இருப்பதாகத் தோன்றினாலும் பரபிரம்மமென பிரமாண சித்தமான மஹேசனிடத்தில் அது எதுவும் ஒட்டாது.

விளக்கம்:—பாரதசேஷமான ஹரிவம்சத்திலும் சகடத்தின் சுழற்சியினால் பயந்த நந்தகோபன் கிருஷ்ணனைக் காப்பாற்றுவதற்காக கூறின கவச மந்திரத்தில் பிரம்மா, விஷ்ணு, ருத்ரர் போன்ற யாவரைக் காட்டிலும் மஹேசனே சிறந்தவரென்பது கூறப்பட்டுள்ளது,

ச்லோகம்—10

கீதாசார்யனை ஸ்ரீகிருஷ்ணர் பகவத் கீதையில் பல இடங்களில் தானே பரப்பிரம்மமென பொருள் படும்படி கூறி யிருக்கிருரே எனில் அடுத்த ச்லோகத்தில் அதற்கு விடை கூறுகிருர்.

गीतासुगूढमुदितं भवतः परत्वं
नैवस्फुटं तदत एव हि सव्यसाची ।
गीथार्थमेव सहसापुनरप्यपृच्छत्
तद्बोधनार्थमुदिता हरिणानुगीता ॥ १० ॥

கீதாஸுகூடமுதிதம் பவத: பரத்வம்
நைவஸ்புடம் ததத ஏவ ஹி ஸவ்யஸாசீ ।
கீதார்த்தமேவ ஸஹஸாபுநரப்யப்ருச்சத்
தத்போதநார்த்தமுதிதா ஹரிணுனுகீதா ॥ 10 ॥

பொழிப்புரை:—கீதையினும் தங்களது மேன்மையே விளக்கப்பட்டுள்ளது ஆனுலும் அது தெளிவாக விளக்கப்படவில்லை. ஆனது பற்றியே தான் அர்ஜுனன் மறுபடியும் கீதார்த்தத்தையே விளகும்படி கேட்க ஸ்ரீகிருஷ்ணன் அனுகீதை மூலம் அதை விளக்கியுள்ளார்.

விளக்கம்:—அச்வமேத பர்வாவில் அநுகீதையின் தொடக்கத்தில் ஹே கிருஷ்ண! தாங்கள் தங்களது பெருமையை பகவத்கீதையில் நட்பின் காரணமாக எனக்கு எடுத்துபதேசித்த போதிலும் நான் யுத்தத்தில் ஈடுபட்டிருந்த காரணத்தால் அதை நன்கு உணரவில்லை. மறந்து விட்டேன். மறுபடியும் அதைக் கேட்கவேண்டுமென்ற ஆவல் எனக்கு அதிகமாயிருக்கிறது என்று அர்ஜுனன் கேட்க ஸ்ரீகிருஷ்ணன் அநுகீதையை தொடங்குகிருர் என்ற விஷயமே இந்த ச்லோகத்தில் அநுவதிக்கப்பட்டுள்ளது.

ச்லோகம்:—11, 12

முன் ச்லோகத்தின் அவதாரிகை பொருத்தமில்லாதது; ஏனெனில் யுத்த ஆரம்பத்தில் தாங்கள் எடுத்துக் கூறிய தங்களது பெருமையை நான் நன்கு அறிந்திருந்தேன். ஆனாலும் அதை மறந்து விட்டேன் என்று கூறியல்லவா அர்ஜுனன் அதை மறுபடியும் சொல்லும்படி கிருஷ்ணனை கேட்பதாகக் காண்கிறதெனில் அப்பொழுது அவன் நன்கு அதை அறிந்திருக்க முடியாதென்பதற்குள்ள காரணங்களைக் காட்டி அவை பொருத்தமானதே என்பதை எடுத்துக் காட்டுகிறார்.

तमेवचाद्यं पुरुषं प्रपद्ये-
त्युदीरितं यन्मधुकैटभद्विषा ।
तमेव सर्वान् भ्रमयन्तमीश्वरं
महाफलाप्त्यै शरणं व्रजेति यत् ॥ ११ ॥

தமேவசாத்யம் புருஷம் ப்ரபத்யே-
த்யுதீரிதம் யந்மதுகைடபத்விஷா ।
தமேவஸர்வாந் ப்ரமயந்தமீச்வரம்
மஹாபலாப்த்யைசரணம் வ்ரஜேதி யத் ॥ 11 ॥

एतेन कृष्णस्य समं मुमुक्षुणा
स्वाराधनीयः प्रतिभासते परः ।
सर्वस्य चाहं हृदिसन्निविष्टे-
त्याद्यैस्तु विष्णुः तदुदेतिसंशयः ॥ १२ ॥

ஏதேன க்ருஷ்ணஸ்ய ஸமம் முமுக்ஷுணா
ஸ்வாராதநீய: ப்ரதிபாஸதே பர: ।
ஸர்வஸ்ய சாஹம் ஹ்ருதிஸந்நிவிஷ்டே-
த்யாத்யைஸ்து விஷ்ணு: தது3தேதி ஸம்சய: ॥ 12 ॥

பொழிப்புரை:— எல்லோருடைய ஹ்ருதயத்திலுமிருந்து கொண்டு எந்த ஈச்வரன் யாவரையும் ப்ரமணத்தை அடையும் படி செய்கிருரோ உத்தமரான அந்த ஆதிபுருஷனேயே நான் சரணடைந்திருக்கிறேன். நீயும் பெரிய பயனைக் கருதி அவரையே சரணமாக அடைய வேண்டுமெனத் தன்னைக் காட்டிலும் வேருன மஹேசனைக் குறிப்பிட்டுவிட்டு 'ஸர்வஸ்ய சாஹம் ஹ்ருதி ஸந்நிவிஷ்ட:' என்று தன்னைப் பற்றியும் கீதையில் கூறியுள்ளதால் அர்ஜுனனுக்கு மட்டுமன்றுயாவருக்குமே ஸந்தேஹம்தான் ஏற்படுமேயன்றி நிச்சயம் ஏற்படாது.

விளக்கம்:—தான் ஒருவரைப் பற்றி மட்டுமன்றி மற்றொருவரையும் பற்றி பெருமையாகக் கூறியிருப்பதால் அர்ஜுனன் அதை அறிந்துகொள்ள முடியவில்லை. அறிந்து மறந்தேனென்பது உபசாரவார்த்தையே ஆகும்.

ச்லோகம்—13

கிருஷ்ணன் சொல்லியிருக்கும் உத்தர வசனத்திலிருந்தும் இவ்விஷயம் அறியப்படுகிறதென அடுத்த ச்லோகத்தில் கூறுகிருர்.

इत्थमस्य यदि संशयो भवेत्
अन्यथाग्रहणमेव वा पुनः ।
नाग्रहीन्मदुपविष्ट एव
इत्यग्रहं हरिरवोचदुत्तरे ॥ १३ ॥

இத்தமஸ்ய யதி ஸம்சயோ பவேத்
அந்யதாக்ரஹணமேவ வா புந:|
நாக்ரஹீந்மதுபதிஷ்ட ஏவ
இத்யக்ரஹம் ஹரிரவோசதுத்தரே || 13 ||

பொழிப்புரை:—கீழ்க்கூறியவாறு அர்ஜுனனுக்கு ஸந்தேஹமோ அன்யதாக்ரஹணமோ ஏற்பட வழியிருப்பதால் தான்,

நான் உபதேசித்தும் அவன் கிரஹிக்கவில்லையென கிருஷ்ணன் தனது பதிலில் கூறியிருக்கிருர்.

விளக்கம்:—பதில் இப்படியல்லவா தொடங்கியிருக்கிறது. 'நான் சொல்லவேண்டியதைச் சொல்லியும் கவனமின்மையால் நீ அதைப் புரிந்துகொள்ளாதது எனக்கு அப்ரீதியானதே. நீ சிரத்தையும் கவனமுமில்லாதவனுகவே இருக்கிருய்''. அப்பொழுது தன்னிடமுள்ள அசக்தியை மறைப்பதற்காக அறிந்து கொண்டேனென்றும் பிறகு கேள்விக்கு இடம் காண்பதற்காக மறந்து விட்டேன் எனவும் கூறியிருக்கிருன். அசக்திக்கும் அப்பொழுதும் யுத்தத்தில் அவனுக்கிருந்த ஈடுபாடே காரணமாகும். கிருஷ்ணனிடம் விச்வாசம் இல்லாமல் தானே யுத்தத்தை நடத்த வேண்டும் என்ற அகங்காரமே அதற்கும் காரணமாகும்.

ச்லோகம்—14

மேலும் சொல்லப்போகும் விஷயத்திலும் முன்போல் அர்ஜுனனுக்கு கவனமின்மை இருக்கக் கூடாது என சிறிது கோபம் காட்டி, எளிதாக உபதேசிக்கும் பொருட்டு ஸாமர்த்தியமாக கீதையில் சொல்லப்பட்ட பெருமையெல்லாம் என்னுடையதல்ல எனக்கு உபாஸ்யமானவரும் என்னைக் காப்பாற்றுபவருமான மஹேசனுடையதே என்பதையே மறைமுகமாக ஸ்ரீகிருஷ்ணன் வெளியிட்டிருக்கிருர் என்று அடுத்த ச்லோகத்தில் கவி கூறுகிருர்.

उक्त्वा च संशयविपर्ययोः निरासं
चक्रे हरिश्चतुरया द्रुतमुक्तिभङ्ग्या ।
शक्यन्तदद्यनमयाभणितुं यथोक्तं
योगाधिरूढमनसा नबहिर्दृशेति ॥ १४ ॥

உக்த்வா ச ஸம்சயவிபர்யயோ: நிராஸம்
சக்ரே ஹரிஸ்சதுரயாத்ருத முக்திபங்க்யா |
சக்யந்ததத்ய ந மயாபணிதும் யதோக்தம்
யோகாதிருட மனஸா நபஹிர்த்ருசேதி || 14 ||

பொழிப்புரை:—யோகத்தில் ஈடுபட்டமனதுடன் அப்பொழுது நான் உபதேசித்த முறையில் இப்பொழுது உபதேசிக்க முடியாது எனக் கூறி அர்ஜுனனது ஸந்தேஹம் அன்யதாக்ரஹணம் இவற்றை ஸாமர்த்யமாகப் பேசி கிருஷ்ணன் போக்கடித்தார்.

விளக்கம்:—கீதையில் நான் உனக்கு உபதேசித்த தத்துவங்களெல்லாம் நானாக உபதேசித்தவைகளல்ல, எனக்கும் ஆராத்யமான சிவ பாவனையின் பலத்தினாலேயே உபதேசிக்கப்பட்டவைகள். ஆகவே அவரே பரம்பொருளாவார் என மறைபொருளாகக் கூறியிருக்கிறார். சில இடங்களில் என்னுடையதாகக் கூறப்பட்டுள்ள பெருமையும் 'தத்க்ரது நியாயத்தைத்' தழுவி அவருடையதேயன்றி என்னுடையதல்ல எனவே கூறியிருக்கிறார்.

ச்லோகம்—15

இவ்வாறு யோகமில்லாமல் கீதார்த்தத்தைச் சொல்ல இயலாது என்று கூறிய பின்பும், நட்பின் காரணமாக மறுபடியும் எப்படியாவது உபதேச மூலம் அர்ஜுனனின் ஐயப்பாட்டைப் போக்க வேண்டுமென்றெண்ணி, ஒரு சித்த புருஷனால் கச்யபரென்ற முனிவருக்கு நான் முன்பு உனக்கு உபதேசித்த கீதார்த்தமே உபதேசிக்கப்பட்டது. அதை நான் கேட்டேன். அதை இப்பொழுது நான் உனக்குச் சொல்கிறேன் என்று கூறி, அவ்விருவரின் ஸம்வாத ரூபமான அந்த இதிஹாஸத்தைச் சொல்லத்தொடங்கி வைராக்யத்தின் பொருட்டு கூடுவிட்டுக் கூடு பாயும் முறை இம்மையிலும் மறுமையிலும் ஸம்ஸாரிகளுக்கு ஏற்படுவது துக்கமே, வைராக்யமே மோக்ஷத்திற்கு உபாயம் என்பன போன்ற விஷயங்களை உபதேசித்து, இதை நன்கு கவனமாகக் கேட்பாயா என்று

கூறிமுடித்தார் என்னும் விஷயத்தைச் சுருக்கமாக அடுத்த ச்லோகத்தில் கூறுகிருர்.

**अधुना तदुपास्य संशयाद्यपगच्छत्विति**
**सौहृदं स्मरन् ।**
**इति ह्योक्तमिहश्रुतंमयेत्युपदेश्ये**
**कियदाह तत्र सः ॥ १५ ॥**

அதுனு ததுபாஸ்ய ஸம்சயாத்யபகச்சத்விதி
ஸௌஹ்ருதம் ஸ்மரன் ।
இதி ஹோக்தமிஹச்ருதம் மயேத்யுபதேச்யே
கியதாஹ தத்ர ஸ: ॥ 15 ॥

பொழிப்புரை:—அர்ஜுனனுக்கேற்பட்ட ஸந்தேஹம் விலகட்டுமென்றெண்ணி நட்பினுல் ஸ்ரீகிருஷ்ணன் இது ஸித்த புருஷனுல் கூறப்பட்டது, என்னுல் கேட்கப்பட்டது என்ற முறையில் கொஞ்சம் விஷயத்தை எடுத்துச் சொன்ஞர்.

விளக்கம்:—கீதையில் கூறப்பட்ட விஷயத்தையே நான் கேட்டேன் என்று கூறும் வாயிலாக அதில் கூறப்பட்டுள்ள மஹிமை என்னைச் சார்ந்ததல்ல மஹேசனையே சார்ந்தது எனத் தெளிவுபடுத்தியிருக்கிருர்.

ச்லோகம்:—16

கேட்டது மட்டுமல்ல அதை நான் மனனமும் செய்தேன் என்று கூறும் வாயிலாகவும் அதைத் தெளிவுபடுத்தியிருக்கிருர் என்று அடுத்துவரும் ச்லோகத்தில் கூறுகிருர்.

**तस्य स्थिरीकरणमात्मनि पूर्ववृत्तं**
**स्वस्यैवबुद्धिमनसी द्विजदम्पती च ।**
**कृत्वानुयोजनतदुत्तरयोरनुक्त्वा**
**विख्याप्यतद्विवरणं च चकार शौरिः ॥ १६ ॥**

தஸ்ய ஸ்திரீகரணமாத்மநி பூர்வவ்ருத்தம்
ஸ்வஸ்யைவபுத்தி மனஸீ த்விஜதம்பதீ ச ।
க்ருத்வாநுயோஜநததுத்தரயோரநுக்த்வா
விக்யாப்யதத்விவரணம் ச சகார சௌரி: ॥ 16 ॥

பொழிப்புரை:—முன்பு தான் கேட்ட விஷயத்தை மனதில் நிச்சயித்துக்கொண்டு அதையே ஒரு பிராம்மணன் பிராம்மணி ஸம்வாத மூலமாக அர்ஜுனனுக்குச் சொல்லத்தொடங்கி முடிவில் அந்த பிராம்மணனும் பிராம்மணியும் என்புத்தியும் மனதும் தான் என ஸ்ரீ கிருஷ்ணர் விளக்கியிருக்கிறார்.

விளக்கம்:—ஏகாந்தத்தில் ஸுகமாக உட்கார்ந்திருந்த ஞானியான ஒரு பிராம்மணனை ஒரு பிராம்மணி அணுகி ஒரு கேள்வி கேட்டாள். அதற்கு அந்த பிராமணர் பதில் சொன்னார் என்று கூறி முன்கூறிய விஷயத்தையே விளக்கி மறுபடியும் பிராமணி க்ஷேத்திரக்ஞனைப் பற்றி கேட்டதாகவும் அதற்கும் அந்த பிராமணன் பதில் கூறினதாகவும் கூறி பின்னர் அர்ஜுனன் பிராமணன்யார்? பிராமணியார்? க்ஷேத்திரக்ஞன் யாரெனக் கேட்க ஸ்ரீ கிருஷ்ணன் என் மனதே பிராமணன், என் புத்தியே பிராமணி, நானே க்ஷேத்திரக்ஞன் என்று கூறியிருக்கிறார்.

ச்லோகம்:—17

இவ்வாறு இரு உபாக்யானங்களால் ஸ்ரீ கிருஷ்ணன் தான் கீதார்த்தத்தை சிரவணம் செய்ததாயும், மனனம் செய்ததாயும் விளக்கமாகக் கூறி, பின்னர் ஒரு குரு சிஷ்ய உபாக்யானத்தினால், தான் கேட்டு மனனம் செய்து பிரம்ம ஸ்வரூபத்திலேயே மனதை ஈடுபடுத்துவதற்குத் தேவையான நிலையான பக்தி ஏற்படவேண்டி அதன் மஹிமையையே அநுஸந்தானம் செய்தல், பிரம்மமே ஜகத்காரணம், தானும் அதனாலேயே ஸ்ருஷ்டிக்கப்பட்ட தன்மை, அதைக்குறித்து கர்மோபாஸனங்களாலேயே பந்த மோசனம் என்று இவற்றையெல்லாம் அர்ஜுனனுக்கு உபதேசிக்க எண்ணி, அந்த

உபாக்யானத்தையும் கற்பனை செய்து கடைசியில் நானும் என் மனதுமே அந்த குருசிஷ்யர்களெனவும் விளக்கியிருக்கிறார் என்ற விஷயத்தை அடுத்துவரும் இரு ச்லோகங்களிலும் சுருக்கிக் கூறுகிறார்.

अग्रेतत्त्वंपरं किं त्वहमपिचकुतः
सर्वं भूतानि चेति
प्रश्नेशिष्यस्य तस्मै गुरुकृतमखिलं
ब्रह्मतत्त्वोपदेशम् ।
मोक्षं शिष्यस्य चोक्त्वापुनरपिविजये
नानुयुक्तो गुरुः कः
शिष्योवेति स्वमेवेश्वरगुरुमवदत्
स्वस्यचित्तं स्वशिष्यम् ।। १७ ।।

அக்ரேதத்வம் பரம்கிம் த்வஹமபிசகுத:
ஸர்வபூதாநி சேதி
ப்ரச்நே சிஷ்யஸ்ய தஸ்மை குருக்ருதமகிலம்
ப்ரம்ம தத்வோபதேசம் ।
மோக்ஷம் சிஷ்யஸ்ய சோக்த்வா புநரபிவிஜயே
நாநுயுக்தோ குரு: க:
சிஷ்யோவேதிஸ்வமேவேச்வரகுரும் அவதத்
ஸ்வஸ்யசித்தம் ஸ்வசிஷ்யம் ।। 17 ।।

பொழிப்புரை:—முதன் முதலில் சிஷ்யன் குருவைப்பார்த்து பரதத்வம் எது, நான் எங்கிருந்து வந்தேன், எல்லா பூதங்களும் எங்கிருந்து வந்தன என்று கேட்க அவ்விஷயங்களையும் மோக்ஷத்தையும் பற்றி குரு அவனுக்கு உபதேசம் செய்தார் எனக் கிருஷ்ணன் அர்ஜுனனுக்கு கூறி, அப்பொழுது அர்ஜுனன் கிருஷ்ணனைப் பார்த்து அந்த குரு யார், அந்த

சிஷ்யன் யார் என வினவ தான் தான் அந்த குருவென்றும் தன் மனது தான் அந்த சிஷ்யனென்றும் கிருஷ்ணன் கூறினார்.

விளக்கம்:—கீழ்கூறிய இரு உபாக்யானங்களின் கருத்தை யறிந்த அர்ஜுனன் கிருஷ்ணனைப் பார்த்து யாவரும் அறிய வேண்டிய பரப்பிரம்மத்தைப் பற்றி விளக்கிக் கூறும்படி கேட்க, அதை உபதேசிக்கும் நோக்கத்துடன் ஸ்ரீ கிருஷ்ணன் சிஷ்யாசார்ய ஸம்வாத ரூபமாக அதைச் சொல்லத் தொடங்கி ஏகாந்தமாயிருந்த ஒரு குருவை அணுகி பிரம்மம் என்பது எது இவ்வுலகம் எங்கிருந்து தோன்றியது எதைக்கொண்டு ஜீவிக்கிறது எதில் லயத்தை அடைகின்றது என்பன போன்ற பல கேள்விகளைக் கேட்டான் என்று சொல்லி, அதற்கு குரு பதில் சொல்வதாகக் கூறி, அதில் கேட்பவனுக்கும் ருசியை உண்டுபண்ணுவதற்காக பிரம்மனுக்கும் ரிஷிகளுக்கும் நடந்த சம்வாத ரூபமாகச் சொல்லத் தொடங்கினார் என்று ஆரம்பித்து, அதைக் கூறும் பொழுது தன்னையும் விஷ்ணுவை யும் பிரம்மமயமெனக் கூறி யாவருள்ளும் தாங்களே மேலான வர்கள் என பிரம்மா ரிஷிகளிடம் கூறியதாகச் சொல்லப்பட் டுள்ளது. இதிலிருந்து இவ்வுலகம் எங்கிருந்து தோன்றிய தென்ற கேள்விக்குப் பதில் கிடைக்கிறது. இங்கு பிரம்மமயம் என்பதனால் பிரம்மாவும் விஷ்ணுவின் அவதாரமான கிருஷ்ண ரும் பிரமத்தின் கார்யம் என 'மய' என்னும் விகுதியினால் கிடைக்கின்றது.

இதற்குப் பின் சிஷ்யனைப் பார்த்து நீயும் பிரம்மாவின் உபதேசப்படி நடந்து கொண்டால் மோக்ஷத்தை அடையலாம் எனக் கூற, அவனும் அவ்வாறே நடந்து கொண்டு துக்க மில்லாத மோக்ஷத்தை அடைந்தான் எனக்கூறி, அதன் பிறகு அர்ஜுனன் கிருஷ்ணனைப் பார்த்து அந்த குரு யார் சிஷ்யன் யார் என வினவ, நான் தான் குரு, என் மனதுதான் சிஷ்யன் எனக் கூறி இந்த உபதேசப்படி நீயும் நடந்து கொண்டால் மோக்ஷத்தை அடையலாம் என்று கூறிய விஷயங்களெல்லாம் இங்கு சுருக்கமாகக் கூறப்பட்டுள்ளது.

ச்லோகம்—18

இவ்வாறு அர்ஜுனன் முன்பு கிரஹிக்காத கீதார்த்தத்தை இப்பொழுது கூறிய விவரத்தைத் தழுவி கிரஹிக்கட்டுமென் றெண்ணி கிருஷ்ணன் அநுகீதையில் கீதையின் பொருளை விளக்கியிருக்கிறார் என்று கருதி விவரணத்தினால் கிடைத்த கீதார்த்தத்தைக் கவி சுருக்கமாகச் சொல்கிறார்.

ब्रह्मण्येवं स्वचेतो मियमन-
समुपस्थापितं ग्रन्थिमोक्षं
स्वेनैवोक्तं विमृश्य प्रपदनवचनं
तत्प्रतीतार्थनिष्ठम् ।
यत्तत्सर्वस्यचाहं हृदिमुखवचनं
तत्पुनश्शास्त्रदृष्ट्या
इत्येवं पार्थोऽवगच्छेदिति-
विवृतिरकार्यत्र गीताशयस्य ।। १८ ।।



ப்ரஹ்மண்யேவம் ஸ்வசேதோ மியமந
ஸமுபஸ்தாபிதம் க்ரந்திமோக்ஷம்
ஸ்வேநைவோக்தம் விம்ருச்ய ப்ரபதனவசனம்
தத்ப்ரதீதார்த்தநிஷ்டம் |
யத்தத் ஸர்வஸ்ய சாஹம் ஹ்ருதிமுகவசனம்
தத்புநச்சாஸ்த்ர த்ருஷ்ட்யா
இத்யேவம் பார்த்தோऽவகச்சேதிதி
விவ்ருதிரகார்யத்ர கீதாசயஸ்ய || 18 ||

பொழிப்புரை:—"தமேவ சாத்யம் புருஷம் ப்ரபத்யே" என்னும் கீதாச்லோகத்தில் கிருஷ்ணன் பரமசிவனைச் சரணடைகிறேன் என்று சொன்ன விஷயம் அநுகீதையில் நான் சிவபிரானிடத்தில் மனதைச் செலுத்தியதனாலேயே எனக்கு

கிரந்தி மோக்ஷம் ஏற்பட்டது என்று தெளிவாக விளக்கப்பட்டிருக்கிறது, எல்லோருடைய ஹ்ருதயத்திலும் நானே இருக்கிறேன் என்று கீதையில் கிருஷ்ணன் கூறியிருப்பதும் ப்ரதர்தனனுக்கு இந்திரன் கூறியது போல் சாஸ்த்ரத்ருஷ்டியைத் தழுவியே எனக் கொள்ள வேண்டும் என்றும் அநுகீதையில் கிருஷ்ணன் விளக்கியிருக்கிறார்.

விளக்கம்:—கீதையின் கருத்தை விளக்கவே அநுகீதை உபதேசிக்கப்பட்டதென்பது வெளிப்படை, அநுகீதையின் தொடக்கத்திலேயே இது தெளிவாக கூறப்பட்டுள்ளது. முடிவிலும் கூறப்பட்டுள்ளது. பொழிப்புரையில் கூறப்பட்டதே விளக்கத்திலும் கூறப்பட்டிருக்கிறது.

ச்லோகம்:—19

இவ்வாறு கீதையில் கிருஷ்ணனும் ப்ரபத்தி செய்வதாய் கூறப்பட்ட பிரம்மம் பரமசிவனே என முடிவு செய்ய சில முரண்பாடுகளை அடுத்த ச்லோகத்தில் விளக்குகிறார்.

तच्च ब्रह्मप्रपत्यास्पदमसुररिपोः
ईश्वरत्वं न चान्यः
नाहं कंचित्प्रपद्ये विबुधमितिवचः
श्रोतुरुत्कृष्टभक्त्यै ।
सेवन्ते नीलकण्ठं परिमितफलदं
न प्रबुद्धा इतीदं
ब्रह्मैक्यध्यात् विद्वद्विषय-
मितरथा नास्ति भूयोनुरोधः ॥ १९ ॥

தச்ச ப்ரம்மப்ரபத்யாஸ்பதமஸுரரிபோ:
ஈச்வரத்வம் ந சாந்ய :
நாஹம் கச்சித்ப்ரபத்யே விபுதமிதிவச :
ச்ரோதுருத்க்ருஷ்ட பக்த்யை ।




ஸேவந்தே நீலக்ண்டம் பரிமிதபலதம்
ந ப்ரபுத்யா இதீதம்
ப்ரம்மைக்யத்யாத்ரு வித்வத்விஷயமிதரதா
நாஸ்தி பூயோநுரோத: ॥ 19 ॥

பொழிப்புரை:—ஹே பரமேச்வர! ஸ்ரீகிருஷ்ணன் ப்ரபத்தி செய்வதாய் சொல்லப்பட்ட பிரம்மம் தாங்களே அன்றி வேறு யாரும் இல்லை. யுதிஷ்டிரருக்கு வைஷ்ணவ தர்மத்தைக் கூறுமிடத்தில் நான் யாரையும் ப்ரபத்தி செய்வதில்லை என கிருஷ்ணன் தன்னைப்பற்றி கூறியிருக்கிருரே எனில் அது ஸ்ரீ வைஷ்ணவ தர்மத்தில் உள்ள ஒருவன் விஷ்ணுவைத் தவிர யாரையும் ப்ரபத்தி செய்யக் கூடாது என்ற அபிப்ராயத்திலேயே அன்றி வேறில்லை. மற்றும் ஓரிடத்தில் அறிவாளிகள் அல்ப பலத்தை கொடுக்கும் நீலகண்டனை ஸேவிக்க மாட்டார்கள் என்று கூறியிருப்பதும் நிர்விசேஷமான பிரம்மத்தை த்யானம் செய்பவர்கள் ஸவிசேஷமான ஸ்வரூபத்தை ஸேவிக்க மாட்டார்கள் என்ற கருத்திலேயே அன்றி வேறில்லை எனக் கொள்ள வேண்டும். இல்லையேல் பலவிடங்களில் கூறியுள்ள விஷயங்களோடு முரண்பாடு ஏற்படும்.

விளக்கம்:—முன் கூறப்பட்டவைகளே பலவித்மான ப்ரமாண வாக்கியங்களைக் கொண்டு விவரிக்கப்பட்டுள்ளன. ஆகவே பரமேச்வரனின் மேன்மையே மஹாபாரதத்திலும் அறியப்படுகிறது.

ச்லோகம்:—20

இந்த நூல் உலகத்தில் நல்ல பிரசாரத்தையடைய வேண்டுமென்ற நோக்கத்துடன் இதன் முடிவில் சிவபாரம்யத்தை உலகத்திற்கு எடுத்து உபதேசித்த வியாஸ குருவை தான் நமஸ்கரிக்கும் முறையில் மங்களச்லோகம் ஒன்றை இயற்றியிருக்கிருர்.

इत्थं चक्रे भारतं यः प्रबन्धं
व्यक्त्या व्यासश्शाम्भवोत्कर्षवर्षी ।

ध्वन्यध्वन्यध्वन्य मूर्धन्य धन्यस्तं
शौरिंतत्साक्षिणं चानतोऽस्मि ॥ २० ॥

இத்தம் சக்ரே பாரதம் ய: ப்ரபந்தம்
வ்யக்த்யா வ்யாஸ: சாம்பவோத்கர்ஷவர்ஷீ ।
த்வன்ய த்வன்ய த்வன்ய மூர்த்தன்ய
தன்யஸ்தம் சௌரிம் தத்ஸாக்ஷிணம்
சாநதோ஽ஸ்மி ॥ 20 ॥

பொழிப்புரை:— வ்யங்க்ய மார்க்கத்தில் தலை சிறந்தவரான வியாஸ பகவான் இவ்வாறு மஹாபாரதத்தில் மஹேச்வரனின் மேன்மையையே முக்கியமாகக் கூறியிருக்கிறார். இவ்வாறு கூறியுள்ள வியாஸ பகவானையும் அதற்கு சாக்ஷியாக அமைந்துள்ள ஸ்ரீ கிருஷ்ண பகவானையும் வணங்குகிறேன்.

இவ்வாறு பாரத்வாஜ குலமென்னும் சமுத்திரத்தில் தோன்றிய கௌஸ்துபமணியும், அத்வைத வித்யாசாரியரும், விச்வஜித்யாகம் செய்த ஸ்ரீ ரங்க ராஜாத்வரியின் புத்திரருமான

ஸ்ரீமத் அப்பய்ய தீக்ஷிதேந்திரர் அவர்கள் அருளிய ஸ்ரீ பாரத தாத்பர்ய ஸங்க்ரஹ ஸ்தோத்ரம் தமிழ் உரையுடன் முற்றிற்று.

சிவம்



யத்யத்கர்ம கரோமி தத்ததகிலம்
சம்போ தவாராதனம்.

# எமது சிவ ஸஹஸ்ரநாம ஸ்தோத்ர வெளியீடுகள்

சிவபெருமானைப் பற்றிய ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரங்கள் சுமார் 15க்கும் மேற்பட்டு பல புராண இதிஹாஸங்களில் உள்ளனவாக அறியப்படுகிறது. 10,000 திருநாமங்கள் கொண்ட அயுத நாம ஸ்தோத்ரமும் உளது. இவற்றுள் 11 ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரங்களையாவது பிரசுரிக்கவேண்டுமென்ற எமது சங்கல்பத்தில் இதுவரை கீழே கொடுத்துள்ள விவரப்படி மூன்று ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரங்களைப் பிரசுரித்துள்ளோம்,

1. ருத்ரயாமளம் என்னும் பெரு நூலில் உள்ளதும். சிவ—ஷண்முக ஸம்வாதமாயமைந்ததுமான சிவ ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரம்.
   160 பக்கம், விலை ரூ: 8-50.
2. பிரத்யக்ஷ சித்தியளிக்கும் ஆகாசபைரவ தந்திரத்தில் உள்ள உமா—மஹேச்வர ஸம்வாத ரூபமான சிதம்பரம் ஸ்ரீ நடேச ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரம்.
   152 பக்கம், விலை ரூ 11-00.
3. பிருங்கிரிடி ஸம்ஹிதையில் சிவ—விஷ்ணு ஸம்வாதமாய் அமைந்த ஸ்ரீருத்ர ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரம்.
   184 பக்கம், விலை ரூ. 15-00.

ஸ்ரீம்ருத்தியுஞ்ஜய ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரம் அடுத்து வெளியிடப்படவுள்ளது. மேற்படி ஸ்தோத்ரங்கள் அனைத்தும் தேவநாகரி தமிழ் இரு எழுத்துக்களிலும் மூலம், அர்ச்சனை நாமாவளி மற்றும் தமிழ் உரையுடனும் கூடியவையாகும்.

பதிப்பாசிரியர் :

ஆங்கீரஸ S. வேங்கடேச சர்மா
5, டெலிபோஸ்டு காலனி குறுக்குத் தெரு,
மேலமாம்பலம், சென்னை-600 033.

## கைவசமுள்ள சில அரிய பிரசுரங்கள்

| | | |
|---|---|---|
| 1 | ஸர்வதந்த்ர ஸ்வதந்த்ரர் ஸ்ரீமத் அப்பய்ய தீக்ஷிதேந்திரர் திவ்யசரித ஸங்க்ரஹம் | ரூ. 4-00 |
| 2 | காரியசித்திதரும் கணபதி ஸ்தோத்ரம் | 0-80 |
| 3 | சிவஞான பூஜாமலர்—1981 | 5-50 |
| 4 | ஷை 1982 | 6-50 |
| 5 | ஷை 1983-84 | 10-00 |
| 6 | ஷை 1985 | 12-00 |
| 7 | ஷை 1987-88 | 12-00 |
| 8 | சிவ ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரம் | 8-50 |
| 9 | சிதம்பரம் ஸ்ரீ நடேச ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரம் | 11-00 |
| 10 | தில்லைத் திருநடனம் | 3-50 |
| 11 | மூவர் தமிழ்மாலை 1—18 | 40-00 |
| 12 | ஷை 19, 20, 21 | 12-00 |
| 13 | வைத்தீசுவரன் கோவில் | 2-50 |
| 14 | மன்னார்குடி ராஜு சாஸ்திரிகள் திவ்ய சரித ஸங்க்ரஹம் | 6-00 |
| 15 | ஸ்ரீ ருத்ர ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரம் | 15-00 |
| 16 | ஸ்ரீசங்கரஜயந்தி வெள்ளி விழா மலர் | 20-00 |
| 17 | The Story of Jagadguru Sri Adi Sankara Bhagavatpada | 3-00 |

இவை அனைத்தையும் ஒரே சமயத்தில் வாங்கினால் தபால் செலவு இலவசம், சலுகையும் உண்டு.

பதிப்பாசிரியர் :

ஆங்கீரஸ S. வேங்கடேச சர்மா

5, டெலிபோஸ்ட் காலனி குறுக்குத் தெரு,
மேலமாம்பலம், சென்னை-600 033.

# மொழிக்கு மொழி தித்திக்கும்

# மூவர் தமிழ் மாலை

திருஞானசம்பந்தர், அப்பர், சுந்தரர் ஆகிய மூவர் அருளிச் செய்த தேவாரத் திருப்பதிகங்களுக்குப் பொழிப்புரை விளக்க உரை, தலவரலாறு, பதிகவரலாறு முதலியவற்றுடன் 108 தமிழ் மாலைகளாக வெளியிடும் முயற்சி. இதுவரை 21 தமிழ் மாலைகள் வெளிவந்துள்ளன.

சந்தா விவரம்

| | |
|---|---|
| முதல் ஆறு தமிழ் மாலைகள் சேர்த்து | ரூ. 10-00 |
| ஏழாவது தமிழ் மாலை முதல் 18-வது தமிழ் மாலை வரை மொத்தம் 12 தமிழ் மாலைகள் | ரூ. 30-00 |
| 19-வது தமிழ் மாலை முதல் தனிப்பிரதி | ரூ. 4-00 |
| ஒவ்வொரு ஆறு மாலைகளும் சேர்த்து | ரூ. 20-00 |
| 108 தமிழ் மாலைகளும் முன் பண உதவிச் சலுகை விலை | ரூ. 225-00 |

முன் பண உதவிச் சலுகை விலை மொத்தமாகவும், தவணைகளில் ஒரு ஆண்டுக்காலத்திலும் செலுத்தலாம்.

முன்பணம் கிடைத்ததும் இதுவரை வெளிவந்துள்ள மாலைகள் உடனே அனுப்பப்பட்டுப் பிறகு ஒவ்வொன்றாக வெளியிடும் போது அனுப்பப்படும்.

பதிப்பாசிரியர்

ஆங்கீரஸ S. வேங்கடேச சர்மா
5, டெலிபோஸ்ட் காலனி குறுக்குத்தெரு,
மேலமாம்பலம், சென்னை-33.

Printed at : Elango Achukoodam, 166, R. H. Road,
Mylapore, Madras-4. Phone : 74121